


# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

LKI | 21.11.2010 | ₹10.00 | 96 பக்கங்கள் | www.kalkionline.com

சிதம்பர ரகசியம்!

அ.தி.மு.க.வில் கார்த்திக்!



தாமரை
பெஷல் பேஜஸ்!

காதல் ஹன்சிகா!

சைபால் எல்லோர் வீட்டிலும் இருக்க வேண்டிய ஒன்று






# இதம் தந்து

# ரணம் ஆற்றும்...







# சைபால்

**BEST SKIN OINTMENT**

எரிச்சல் தரும் வெட்டுக்காயத்தின் மேல் சைபால் தடவுங்கள். எரிச்சலைப் போக்கி இதம் தரும். காயம் இருந்த சுவடே காணாமல் போகும்.

★ வெட்டுக்காயம் ★ முகப்பரு ★ சேத்துப்புண் ★ தேமல் ★ வேனல்கட்டி ★ பித்தவெடிப்பு முதலிய வியாதிகளுக்கு சிறந்தது.

உரிமையாளர் : சைபால். S. சங்கரநாராயணன்

Mfrs. : THE SOUTH INDIAN MFG. CO., MADURAI-20. Ph : 2534108

அவதாரத்தின்
மகிமைகளை
அனுபவிக்கத்
தயாராகுங்கள்...



அடுத்த
**கல்கி** இதழ்

# சாயி ஸ்பெஷல்!

ஹாய் டீன்ஸ்!



உங்களைத் தேடி வருது...

**உல்லாசப் பரிசுகள்!**

சேலம் மாவட்ட
(5.12.2010, 12.12.2010)
சிறப்பிதழ்களில்
உங்களுக்குப்
பரிசுப் போட்டி காத்திருக்கு!
விவரங்கள் அடுத்த இதழில்...

ம்... ஜமாய்ங்க...

> நான் என்ன எதிர்பார்த்தேனோ அதை 'வாரணம் ஆயிரம்' படத்தில் 'அஞ்சலை' பாடலில் அப்படியே கொண்டு வந்துவிட்டார் தாமரை.



# வேவ்லெங்த் சரியா இருக்கு!

**ஹாரீஸ், கௌதம், தாமரை காம்பினேஷனில் கோல்டன் பாடல்களைக்கட்டி இனிப்பு பாடல்களை இதயங்களில் நடவிக் கொண்டிருக்கிறது. தாமரை ஸ்பெஷல் பேஜஸ்க்காக கௌதம் வாசுதேவ் மேனனைச் சந்தித்து கேட்டபோது சொன்ன சுவையான தகவல்கள்...**

"என் முதல் படமான மின்னலேவை இயக்கியபோது, புது இயக்குநரான எனக்கு வாலி, வைரமுத்து ஆகிய சீனியர்களை அணுகி, பாடல் கேட்பதற்குத் தயக்கமாக இருந்ததால், தாமரையைப் பாடல்கள் எழுத வைத்தேன். வழக்கமாக சினிமாவில் ஆண்களின் கோணத்தில் ஒரு பெண்ணைப் பார்த்துத்தான் காதல் பாடல்கள் எழுதுவார்கள். ஆனால் தாமரையின் முதல் பாடலான, 'வசீகரா'வில் ஒரு பெண்ணின் பார்வையில் எழுதியதே என்னை உற்சாகப் படுத்தியது. தாமரை, ஏராளமான பல்லவி, சரணங்களை எழுதிக் கொடுத்து, 'உங்களுக்கு எது பிடித்திருக்கிறதோ அதை வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னபோது, நான் திக்குமுக்காடிப் போனேன்.

எனக்கும், கவிஞர் தாமரைக்கும் இடையிலான வேவ்லெங்த் சரியாக இருப்பதால், என் படங்களுக்குத் தேவையான பாடல்களை அவரால் சிறப்பாக எழுதித் தர முடிகிறது. பாடலாசிரியர்களுக்கு, பாட்டுக்கான சிச்சுவேஷன்களைச் சொல்லிப் பாட்டு எழுதி வாங்குவதுதான் சினிமா உலக வழக்கம். ஆனால், நான் தாமரையிடம் என் படங்களின் கதையை முழுமையாகச் சொல்லி, பாடல் வரும் இடங்களையும் குறிப்பிடுவேன். ஒவ்வொரு பாடலிலும் நான் என்ன எதிர்பார்க்கிறேன் என்பதை ஈ மெயில், அல்லது எஸ்.எம்.எஸ். மூலமாக ஆங்கிலத்தில் சொல்லிவிடுவேன். அவர் என் எண்ணங்களை உள்வாங்கிக்கொண்டு, எதிர்பார்ப்பினை முழுமையாகப் பூர்த்தி செய்யும் விதமாக ஒவ்வொரு பாடலையும் எழுதிக் கொடுக்கிறார். அவருடன் பணியாற்றுவதை ஒரு இனிய அனுபவமாக நான் உணர்கிறேன்.

வாரணம் ஆயிரம் படத்தில் 'அஞ்சலை' பாட்டை அவரால் எழுத முடியுமா? என்று எனக்கு லேசான சந்தேகம் இருந்தது.

ஆனால் அவர் 'தன்னால் அப்படி ஒரு பாடலை எழுதித்தர முடியும்' என்று தன்னம்பிக்கையோடு நான் என்ன எதிர்பார்த்தேனோ அதை அப்படியே பாட்டில் கொண்டுவந்துவிட்டார்.

'விண்ணைத் தாண்டி வருவாயா' படத்தில் வழக்கமான ஹாரிஸ் ஜெயராஜ் இல்லாமல், ரஹ்மான் இசையமைத்தபோது, அவர் சொன்ன முதல் விஷயம்: 'இசையமைப்பாளர் மாறினாலும், உங்கள் டீமில் வேறு எந்த மாற்றமும் இல்லாமல் அப்படியே இருக்கட்டும்' என்பதுதான். ரஹ்மான், தாமரை, நான் மூவரும் ஒன்றாக அமர்ந்துதான் பாடல்கள் பற்றி டிஸ்கஸ் செய்தோம். ரஹ்மான் சொன்ன சின்னச் சின்ன ஆலோசனைகளைக் கேட்டுக்கொண்டு அவற்றைப் பாடல்களில் சரியாகப் பயன்படுத்தியது அவரது திறமைக்கு எடுத்துக் காட்டு.''

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி






# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர்:
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள்:
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899
ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ₹ 500/-
வெளிநாடு : ₹ 3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# ஜெயலலிதாவுக்கு பெருமை!

**-உதயநிதி**

கோடம்பாக்கம் முரசொலி அலுவலகத்துக்குப் பின்னால் இருக்கிறது உதயநிதியின் ரெட் ஜெயண்ட் மூவிஸ் அலுவலகம். முதலாளி உள்ளே இருப்பதற்கு அடையாளமாக அலுவலகம் ரெட் அலர்ட்டில் இருக்கிறது. நடிகராகவும் புது அவதாரம் எடுத்திருக்கும் உதயநிதி தமது தோற்றத்தில் கவனம் செலுத்துவது, பார்க்கும் போதே பளிச்செனத் தெரிகிறது. செல்ஃபோன் காலர் ட்யூன் 'மைனா' பாட்டுதான். உற்சாகமாக இருக்கிறார் உதயநிதி. காரணம் 'மைனா' வெற்றி.

மைனா கிளைமாக்ஸ்...?

''கதாநாயகி மரணத்துக்குக் காரணமான மற்றொரு பெண் பழிக்குப் பழி கொலை செய்யப்படுவதை ரசிகர்கள் ஏற்றுக்கொண்டு விட்டார்கள். இயக்குநர் பிரபுசாலமன் விடாப்பிடியாக வைத்த காட்சிகள் அவர் எதிர்பார்த்தபடியே ரசிகர்களின் அங்கீகாரத்தைப் பெற்றுவிட்டது.''



'மைனா' படம் பார்த்துவிட்டு இரண்டு நாள் தூக்கம் போச்சாமே உங்களுக்கு?

''ஆமாம். எனக்கு மட்டுமில்லை. படம் பார்க்கும் பெரும்பாலான ரசிகர்கள் இதையேதான் சொல்லுவார்கள். ரஜினி சார் ஃபோன் செய்து, ''உனக்கு ரெண்டு நாள்... எனக்குப் பத்து நாள் தூக்கம் போச்சே; எனக்கு இந்தப் படத்தில் நடிக்க வாய்ப்பு கிடைக்கவில்லையே... ஒரு சீன்லயாவது நடிச்சிருக்கணும்'' என்று சொன்னது ஒரு பெரிய பாராட்டு.''

உங்க தயாரிப்பும்

சரி, வாங்கி விற்கும் படங்களும் சரி... சக்கை போடு போடுவதன் ரகசியம்?

''சினிமா சூதாட்டம் போன்றதுதான். போன படம் சூப்பர் வெற்றி என்று அடுத்த படத்தைச் சொதப்பலாக்கிவிட்டால் இண்டஸ்ட்ரி நம்மை மறந்துவிடும். எனது ஒவ்வொரு படமும் ரிலீஸ் ஆகும் முன் தூக்கம் வராது. முதல் நாள்... முதல் ஷோ... ரசிகர்களோடுதான் பார்ப்பேன். அப்போதே தெரிஞ்சுடும் ரிசல்ட். என் படங்களின் வெற்றி ரகசியம், நல்ல கதை, இளசுகளை நோக்கிய காட்சி அமைப்பு. வாரத்துக்கு நான்கைந்து படங்களைப் பார்க்கிறேன். எல்லாவற்றையும் வாங்க முடியாது. என்னிடம் ஒரு டீம் இருக்கிறது. அவர்கள் ஒவ்வொரு படத்தையும் பார்த்து அக்கு வேறாக அனலைஸ் செய்த பிறகு 'ஓ.கே.' என்றால்தான் வாங்குவேன்.''

## தாத்தா வரலாற்றையும் படமாக எடுக்க ஆசை!



மன்மதன் அம்பு... பெரிய பட்ஜெட் படமாச்சே!

''உண்மைதான். ஐரோப்பாவில் 20 நாள் ஒரு ஆடம்பர கப்பலில் ஷூட் செய்தோம். பின்னர் அங்கேயே பல நகரங்களிலும் எடுத்திருக்கிறோம். படம் நல்லா வந்திருக்கு. கமல் பிரமாதமாகச் செய்திருக்கிறார். டிசம்பரில் ரிலீஸ்.''

கமலுடன் ஒர்க் செய்யும் அனுபவம்?

''நான் நடிப்பதால் நிறைய அட்வைஸ் கொடுத்திருக்கிறார். தாத்தாவின் பழைய படங்களைப் பற்றி நிறையச் சொல்லுவார். ''நல்ல சினிமாவை என்கரேஜ் பண்ணுங்க'' என்பார். நான் அவரது ரசிகன்.''

நடிகர் 'உதயநிதி...'?

''தயாரிப்பாளராகத்தான் இருக்க விரும்பினேன். ஒரு தெலுங்கு தயாரிப்பாளர் ''நீங்க நடிங்க... நல்ல கதை இருக்கு'' என்று ஆதவன் படத்துக்கு முன்பே என்னிடம் வந்தார். இயக்குநர் ரவிக்குமார் 'நடிக்கலாமே' என்று தட்டிக் கொடுத்தார். அதில் ஒரு சீனில் தலை காட்டியது அப்படித்தான்.''

ஹீரோவாக எப்ப முடிவு செஞ்சீங்க?

''ஓ.கே. என்று நான் முடிவு எடுத்தவுடன் பல இயக்குநர்கள் என்னை அணுகினார்கள். ஆனால் இயக்குநர் ராஜேஷ் செய்த ஸ்கிரிப்ட் ஒர்க்தான் எனக்கு மிகவும் பிடித்துப் போனது. 'சிவா மனசுல சக்தி' படத்திலிருந்து அவரைப் பார்க்கிறேன். ராஜேஷ் இயக்கத்தில் நடிக்கிறேன். படத்தின் பெயர் 'ஒரு கல்-ஒரு கண்ணாடி'.''

அது என்ன நயன்தாரா விவகாரம்?

''நயன்தாராவிடம் ஹீரோயினாக நடிக்க நாங்கள் கேட்கவே இல்லை. அதற்குள் அவர் மறுத்துவிட்டார் என்று வதந்தி பரவியிருக்கிறது.''

உங்கள் மனைவி எடுக்கும் குறும் படங்களில் நடிப்பீர்களா?

''படத்தோட ஸ்கிரிப்டைப் பொறுத்து இருக்கு. அவருக்குத் திரைப்படம் இயக்கும் ஆசையும் இருக்கிறது. எனக்கு சில ஸ்கிரிப்ட் கொடுத்திருக்கிறார்.''

அஜீத்தை வைத்துப் படம் எடுப்பீங்களா?

''ஏன் இப்படிக் கேக்கறீங்க? சினிமாவை ஒரு தொழிலா செய்யறோம்.

நான் திரைத் துறையில் யாரிடமும் அரசியல் பேசுவதில்லை. அஜீத்துக்கு ஏற்ற கதை கிடைக்கும்போது நிச்சயம் அவரை வைத்துப் படம் பண்ணுவேன். அவர் என் நண்பர். இப்போது துரை தயாநிதி அவரை வைத்து 'மங்காத்தா' எடுக்கிறாரே!''

நடிகர் உதயநிதி என்ன மாறுதல்...?

''ஒண்ணுமில்லை. ஜிம்முக்குப் போகிறேன். கொஞ்ச நாள் டான்ஸ் கிளாஸ் போனேன். ''நல்லா ஆடறே''ன்னு மாஸ்டர் சொல்லிவிட்டார். டயட்டில் பெரிய மாறுதல் ஏதுமில்லை.''



## "ஜெயலலிதா அரசியலுக்காக என்ன வேண்டுமானாலும் பேசுவார்"

எல்லோரும் ஹீரோவிலிருந்து முதல்வர் லட்சியத்தைக் குறி வைப்பார்கள். நீங்கள் முதல்வர் குடும்பத்திலிருந்து ஹீரோ... தாத்தா இடத்தைப் பிடிக்கும் ஆசை உண்டா?

''அதுபோன்ற எண்ணமே கிடையாது. அரசியலில் பிரகாசிக்கணும்னா தியாகம் செய்திருக்கணும். என்னோட அரசியல் அப்பாவுக்காக ஆயிரம் விளக்குத் தொகுதியில் வீடுவீடாகப் பிரசாரம் செய்வதோடு முடியும். தவிர அப்பா பிரசாரத்தில் இரண்டு நான் கலந்து கொள்வேன். அவ்வளவுதான் எனது பாலிடிக்ஸ்.''

தாத்தா ஸ்கிரிப்டில் படம் செய்யும் ஆசை?

''அவரது ஸ்கிரிப்டை வைத்துப் படம் செய்யணும்கிறதைவிட 'பெரியார்' படம் போன்று, தாத்தா வரலாற்றையும் படமாக எடுக்க வேண்டும் என்ற ஆசை தான் எனக்கு நிறைய இருக்கிறது. அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறேன்.''

உங்கள் குடும்பத்தினர் தியேட்டர்களைக் குத்தகைக்கு எடுத்துவைத்துக் கொண்டு மற்றவர் படங்களுக்கு தியேட்டரே கிடைக்காமல் செய்வதாக ஜெயலலிதா குற்றம் சாட்டுகிறாரே?

''ஜெயலலிதா பொறாமையால் பேசுகிறார். நான் எந்த தியேட்டரையும் குத்தகைக்கு எடுக்கவில்லை. என் படங்கள் நன்றாக ஓடுவதால் தியேட்டர்காரர்கள் விரும்பி



வாங்குகின்றனர். மற்றவர் படங்களும் வந்து கொண்டுதானிருக்கின்றன. தீபாவளிக்கு மற்றவர் படங்கள் ஐந்தும் அதற்கு முன்பு நான்கும் வந்தனவே.''

கோடிக்கணக்கில் புரளும் திரையுலகில் நீங்கள் திடீரென குதித்து கலக்குவது கேள்விகளை எழுப்பியிருக்கிறதே?

''தயாரிப்பாளராக வருவதற்கு முன் வேறொரு தொழிலில் இருந்தேன். முன்னமே சொன்னதுபோல் சினிமா ஒரு தொழில். இந்தத் தொழிலில் எங்கள் குடும்பம், ஐம்பது வருடங்களுக்கும் மேலாக இருக்கிறது. என்ன வேண்டுமானாலும் பேசலாம். கேட்க வேண்டியவர்கள் கேட்டால் முறைப்படி பதில் சொல்லுவேன்.''

**- ப்ரியன்**

**படங்கள் : ஸ்ரீஹரி**

**க**ல்கி தீபாவளி மலர் 2010 - இதழின் அட்டையில் ஓவியர் வேதாவின் உயிரோட்டமான எங்கள் தில்லை அம்பலனைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்திவிட்டீர்கள். இந்தப் புத்தகத்தில் எதையும் குறை கூறி விட முடியாது. ஏன்னா என்றுமே கல்கி, தமிழ் பத்திரிகை உலகில் முழு பௌர்ணமியாகப் பளிச் என மின்னுகிறது. கல்கி-மங்கையர் மலர்-கோகுலம் என்று எல்லாத் தரப்பு மக்களையும் திருப்தி அடையச் செய்துவிட்டீர்கள். உங்கள் கடுமையான உழைப்புக்குத் தலைவணங்கி வாழ்த்துகிறேன்.

**- பி. பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி**

**சு**மார் 344 இதழ் கொண்ட மகத்தான மலர் படித்தேன். கிரேஸி மோகன் தமக்கே உரித்தான கதையை இன்னும் நீளப்படுத்தியிருக்கலாம். மனிதர் எழுத்திலும் சிரிக்க வைக்கிறார். வேலு சரவணன் சிந்திக்கவும் வைக்கிறார். ஓவியர் பிஸ்வாசின் ஓவியங்கள், அவரைப் பற்றிய தகவல்கள் மலரின் மகுடங்கள். அமரர் கல்கியும், ஓவியர் கோபுலுவும் இணைந்தாலே தனி அழகு. 'ஆழ்வார்களும் தமிழும்' சிந்தனையைத் தரும் நல்ல கட்டுரை. மொத்தத்தில் இவ்வருட மலரும் எங்களுக்கு ஒரு பொக்கிஷம்தான்.

**- சிம்மவாஹினி, சென்னை**

**ம**தனின் சிறப்பான பேட்டி, மலாக்காவின் எழில்மிகு காட்சிகள், நா.முத்துக்குமார், கதிர்பாரதி, மதுமிதா, திலகபாமா, முகுந்த் நாகராஜன் ஆகியோரின் கவிதைப் பக்கங்கள், டாக்டர் சீனுவாசனின் வனவெளி தரிசனம் படங்கள் ஆகியவை மலருக்கு மணம் சேர்த்தன. **- எம். செல்லையா, சாத்தூர்**

**சு**கி.சிவம், ஆடலரசரின் அற்புத குணங்களை ஆறு பக்கங்களில் நாத்திகர்கள் கூட ஏற்றுக் கொள்ளும்விதமாய் அழகுபட விவரித்த மாண்பு மிக அற்புதம்!

**- ரேவதிப்ரியன், ஈரோடு**




**கல்கி தீபாவளி மலரின் விலை உயர்ந்து விட்டதே என்று கவலைப்பட்டேன். ஆனாலும் மலரை வரவழைத்துப் பார்த்தவுடனேயே கவலையெல்லாம் பறந்தோடிவிட்டது! விலை மட்டுமல்ல; கல்கி மலரின் சிறப்பும் எவ்வளவோ உயர்ந்துவிட்டது. தீபாவளி என்றாலே கல்கி மலர்தான் ஒவ்வொரு வருஷமும் என் நினைவுக்கு வருகிறது. அதுவும் இந்த வருட மலர் மிக மிகச் சிறப்பாக இருக்கிறது.**

- என்று முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு 2.11.1975ல் நான் எழுதி, கல்கியில் வெளிவந்த என் கடிதத்தை ஒரு எழுத்துக் கூட மாற்றாமல் அப்படியே மறுபடியும் பிரசுரித்தால், அதுதான் என்னுடைய இந்த வருட கல்கி தீபாவளி மலரைப் பற்றிய கருத்தாகும்!

**- சின்னஞ்சிறு கோபு, மயிலாடுதுறை**

'மென்பாதங்கள்' என்ற தலைப்பில் 83ஆம் ஆண்டு கல்கியில் தாமரை எழுதிய முதல் கவிதை வெளியானது. இன்று 500 திரைப்படப் பாடல்களை எழுதி தொழில்முறை பாடலாசிரியராக முன்னணி கவிஞராக இருக்கிறார் தாமரை.

தமிழ்த் தேசிய அரசியலினூடே அவர் ஆற்றும் பணிகள் அநேகம்.

சினிமா, அரசியல் என்ற இரு துறைகளில் இயங்கும் தாமரையின் அரசியல் விமர்சனம் உத்வேகமானது. அவரைச் சந்தித்து உரையாடியதிலிருந்து...

**பா**டலாசிரியர் - அரசியல்வாதி - குடும்பத் தலைவி... பொறுப்பும் மகிழ்வும் எதில் உண்டு?

''பாடலாசிரியர் என்பது தொழில். அரசியல் என்பது சமூகக் கடமை. குடும்பத் தலைவி இயற்கை! மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. ஒன்று சரியாக இருந்தால்தான் இன்னொன்று சரியாக இருக்கும். மூன்றையும் சரிவர சமன் செய்ய முயல்கிறேன்.''

மனசாட்சியோடு சொல்லுங்கள் - தமிழ் சினிமா உங்களுக்கு வெறும் தொழில்தானே?

''உலகத்தில் பிறந்த ஒவ்வொருவருக்கும் (விதி விலக்குகள் தவிர்த்து) வாழ்க்கையை நடத்திச் செல்லத் தொழில் தேவைப்படுகிறது. ஆனால் எந்தத் தொழில் செய்தாலும் அதில் ஒரு நேர்மை, ஒழுக்கம், தர்மம், சமூக நோக்கம் வைத்துக் கொண்டால், அது நமக்கு மட்டுமல்ல; சமூகத்துக்கும் நன்மையே தரும்! நான் தேர்ந்தெடுத்துக் கொண்ட தொழில் திரைப்படப் பாடல். அதன் மூலம் துறையிலும் வெளியிலும் நல்ல மாற்றங்கள் கொண்டு வர முனைகிறேன். ஒவ்வொருவரும் தத்தம் துறையைச் சீர்செய்வது என்று உறுதி எடுத்துக் கொள்ளட்டும். பிறகு பாருங்கள் சமூக மாற்றத்தை!''

என்ன செய்தால் தமிழக அரசைப் பாராட்டுவீர்கள்?

# தட்டிக் கேட்பது உருப்படியான வேலைதான்!

ஐயா வாங்க, அம்மா வாங்க, என்று ஊற்றிக் கொடுக்கும் அரசு முழுமையான மதுவிலக்கைக் கொண்டுவரட்டும். இந்த அரசை வணங்கி வரவேற்பேன்.



''எத்தனையோ உண்டு. இரண்டை மட்டும் சொல்கிறேன். ஈழத் தமிழர் இன அழிப்பில் இந்திய அரசின் பங்கேற்பைத் தடுக்கும் சட்ட அதிகாரம் தமிழக அரசுக்கு இல்லைதான். ஆனால், அதைத் தடுத்து நிறுத்தி இருக்க வேண்டிய அறப் பொறுப்பு இருந்தது. அதை மறைத்து, நடந்த கொடூரங் களுக்குத் தமிழக அரசும் துணைபோனது தான் எங்களைப் போன்றவர்களைக் கடுமையான எதிர்வினை ஆற்றச் செய்து விட்டது. இப்போது ராஜபட்சே போர்க் குற்றவாளி என்று சட்டசபையில் தீர்மானம் இயற்றட்டும். போர்க் குற்றங்கள் தொடர் பான ஐ.நா.விசாரணைக்கு ஆதரவு தெரி விக்கட்டும். கொலைகார சிங்கள அரசு டனான உறவைத் துண்டித்துக் கொள்ள இந்திய அரசை வலியுறுத்தட்டும். மனமுவந்து பாராட்டுவேன்.

தமிழகத்தின் அனைத்துச் சீர்கேடு களுக்கும் மது முதன்மைக் காரணம். சிறுவர், பெரியவர், படித்தவன், பாமரன், ஆண், பெண் என்று எந்தத் தாராதரமுமின்றி தமிழ்நாடே மதுவின் பிடியிலிருக்கிறது. மூளையை மழுங்கடித்து, குடும்பத்தைக் கெடுத்து, சமூகத்தைச் சீரழிக்கிற மதுவை, 'ஐயா வாங்க, அம்மா வாங்க' என்று ஊற்றிக் கொடுக்கும் அரசை என்ன சொல்லித் திட்டலாம்?

முழுமையான மதுவிலக்கைக் கொண்டு வரட்டும். கள்ளச் சாராயத்தையும் ஒழிக் கட்டும். வணங்கி வரவேற்பேன்!''

இலக்கியத்திலிருந்து அரசியலுக்கு வந்த சல்மா மாதிரி, நீங்கள் உங்களுக்கும் சமூகத்துக்கும் உதவும் அரசியல் செய் யக் கூடாதா?

''ஒரு கட்சியில் சேர்ந்து தேர்தலில் போட்டியிடுவதுதான் அரசியல் என்றால் நான் ஒருபோதும் 'அரசியல்' செய்ய மாட்டேன். குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் அரசியல் தெளிவு இருக்க வேண்டும். அரசியல் அவர்களது அன்றாட வாழ்வைப் பாதிப்பதால், அவர்களும் அரசியல் நிலை யெடுக்க வேண்டும். அந்த முறையில் அரசியலில் எனக்குச் சரியெனப் பட்டதை வரவேற்கிறேன். அல்லாததைத் தட்டிக் கேட்கிறேன். இதுவே உருப்படியான வேலைதான்!''

உங்கள் கணவர் பற்றி சில வரிகள் சொல்ல முடியுமா?

''ஏழைத் தொழிலாளர்களைக் கொடுமை செய்யும் வில்லன் பண்ணையார்களை அழித்து, சமூகச் சீரழிவுகளை எதிர்த்துக் குரல் கொடுத்து, தப்பானவர்களின் அட்டூழியங்களுக்கு அஞ்சாமல் துணிந்து போராடி நியாயத்தை நிலை நிறுத்தும் கதாநாயகர்களை நீங்கள் எல்லாம் திரைப் படத்தில்தான் கண்டிருப்பீர்கள். நான் நிஜத்தில் திருமணமே செய்து கொண்டேன். தியாகு தமிழ்நாட்டின் கதாநாயகன்! அன்பு, பண்பு, அறிவு, இலட்சியம், வீரம், உழைப்பு, தியாகம் என்று எல்லாவற்றிலுமே சிறந் தவர்! நிகரில்லாத மார்க்சிய அறிஞர்.

என்ன ஒன்று, இத்தகைய கதாநாயகர் களைத் திருமணம் செய்து கொள்கிற




பெண்கள் மிகுந்த மனத்திடமும், தியாக உணர்வும் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

வீட்டில் இருந்தால் பழங்கள் வெட்டிக் கொடுப்பது முதல் குழந்தையைக் கவனித்துக் கொள்வது வரை அனைத்தையுமே செய்வார். வெளியில் சென்றால் வீட்டையே மறந்துவிடுவார். உண்மையில் இத்தகைய முழுநேர சமூக ஊழியர்களுக்குக் குடும்பம், குழந்தை எல்லாம் தடைக்கற்களே என்று பலமுறை நான் நினைத்ததுண்டு!''

பாடலைத் தவிர சினிமாவில் வேறு ஏதேனும் பிரிவில் நகரும் திட்டம் உள்ளதா?

''கதை, திரைக்கதை விவாதம், வசனம் எழுதுவது, உதவி இயக்கம், நடிப்பு, பின்னணிக் குரல், தொலைக்காட்சி விருந்தாளி, நடுவர் என்று பல பிரிவுகளிலிருந்தும் எப்போதுமே எனக்கு அழைப்புகள் உண்டு. சிரித்து மறுத்துவிடுவேன். என் பலம் என்னவென்று எனக்குத் தெரியும். 'செய்வன திருந்தச் செய்' என்பது என் இயல்பு. பாடலாசிரியராக முன்னணியில் இருக்கிறேன். இப்போதைக்குப் பாடலைத் தவிர வேறு எதற்கும் நகர்வதாக இல்லை.''

அதிகாரத்தைக் கைப்பற்றும் அரசியலில் நுழைவீர்களா?

''ஒருபோதும் மாட்டேன். அப்படிப்பட்ட அரசியலுக்கும் எனக்கும் காததூரம். என்னுடைய இயல்பான ஆர்வமும் திறமையும் இலக்கியமே! அதைச் செய்யவே விரும்புகிறேன். அரசியலுக்குத் தேவையான தலைமைப் பண்போ, மக்களோடு கலந்து பழகும் குணமோ, பயணம் செய்யும் பழக்கமோ என்னிடம் துளியும் இல்லை நான் தனிமை விரும்பி! என் உடல் நலக் குறைபாடு காரணமாக வீட்டை விட்டு நகரவோ, மேடையேறவோ, உரத்துப் பேசவோ என்னால் இயலாது. அரசியலில் கருத்துகளைப் பரப்புவதுதான் என் வடிவம்!''

ஒரே அரசியல் - சீமான் உள்ளே, நீங்கள் வெளியே! இது அடக்கி வாசிப்பதன் டெக்னிக்தானே?

''சீமானும் நானும் ஈழ ஆதரவாளர்கள் இருவரும் தமிழ்த் தேசியத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். அவர், நாம் தமிழர் கட்சியின் ஒருங்கிணைப்பாளர். நான் எந்த அமைப்பையும் சேராதவள். இருவரும் 'தமிழர் நலம்' என்ற ஒரே நோக்கம் கொண்டவர்கள்தாம். ஆனால் வழிமுறைகள் வேறு வேறு!

கருத்துரிமையின் கழுத்தை நெரிக்கிற அரசு, சீமானைச் சிறையிலடைத்துள்ளதே தவிர அவராகப் போய் சிறைக்குள் உட்கார்ந்து கொள்ளவில்லை. என்னைக் கைது செய்ய வேண்டும் என்று அரசு முடிவெடுத்துவிட்டால் எந்த நிமிடமும் அதைச் செய்யலாம். காரணம் கண்டுபிடிப்பது ஒன்றும் கடினமான காரியமில்லை!

படைப்பாளிகளின் நியாயமான கருத்துக்கள் அரசுகளைக் கலவரப் படுத்துகின்றன. அதற்காக அவர்களைக் கைது செய்ய விரும்பினால் அது அரசுக்கும் நாட்டுக்கும் கேடுகாலம் என்று பொருள்! உதாரணம்: அருந்ததிராய்.''

சந்திப்பு : **அமிர்தம் சூர்யா**

## வட்டமேஜை

'**நை**சா ஒரு ஷாக்!' வாசகர் தலையங்கம் செம ஷோக்; சம்பந்தப்பட்டவர்களின் கவனத்தை ஈர்த்தால், பயன் கிடைக்கும்!'

**- அனன்யா, திருச்சி**

**கா**ர்த்தி பேட்டி, ஸ்ரீநிதி கடிதம் செம அருமை! அரசியலுக்கு அப்பால் அது ஓர் இனிப்பு டிப்ஸ்!

**- வள்ளியூர் ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்**



# அதுவொரு இனிப்பு டிப்ஸ்!

'**ந**வநீதகிருஷ்ணனின் காதல் கதை!' சொல்லியவிதம் மிக நேர்த்தியாக இருந்தது. ஒரு தேர்ந்த எழுத்தாளரைப் போல கதை நடை இருந்தது கூடுதல் சிறப்பு.

**- என். பாலகிருஷ்ணன், மதுரை**

**இ**வ்வார கார்ட்டூன் இரண்டும் சும்மா 'நச்சுன்னு' இருக்கு சாரே!

**- அ.முரளிதரன், மதுரை-3**

**பா**லிடிக்ஸ் பஜார் பக்கம் அனல் அடிக்குதுங்கோ? அதுவும் ராஜாவுக்கு செக்! செம ஹாட்!

**- வே.முருகேசன், சென்னை**

'**கொ**ஸ்டின் பேங்க்' நூறு சதவிகிதம் பயன்தரும் பகுதி என்றே சொல்லலாம். கல்கி கிளினிக் - அருமையான மருத்துவப் பகுதி.

**- எஸ். வளர்மதி, கொட்டாரம்**

**வ**ளரும் இளம் அரசியல்வாதி கார்த்தி சிதம்பரம் ''எனக்குப் பெற்றோர்கள் கொடுத்த சுதந்திரத்தை, என் மனசாட்சிக்கு விரோதமாகப் பயன்படுத்தியது கிடையாது'' என்று கூறியது சபாஷ் போட வைத்தது.

**- ரேவதிப்ரியன், ஈரோடு**

**தீ**பாவளி சிறப்பிதழில் தொடங்கிய 'சப்புக் கொட்டும் சமையல் தொடர்', 'வாரம் ஒரு மந்திரம்', 'ஆங்கில ஆச்சர்யங்கள்' ஆகிய மூன்று தொடர்களும் பெரும் எதிர்பார்ப்பை ஏற்படுத்தி ஆவலைத் தூண்டிவிட்டன.

**- ஆர்.தனபால், சென்னை**

**31**.10.10 இதழில் போளூர் ரகுபதி எழுதிய 'கிழவனுக்கு ஒரு போர்வை' என்ற கதை, மனத்தைத் தொடும் கவிதை. வீட்டில் வசிப்பவர், அவருக்கு ஒரு போர்வையைக் கொடுக்க ஆயிரம் யோசனை. எவ்வளவு அனாயசமாகக் கொடுத்துவிட்டார் நிர்வாணத்தை மறைக்க! சபாஷ்!

**- தாமலை கண்ணன், பெங்களூரு**

லீலா இராம், தக்கலை

ஜலதோஷம் அல்லது தும்மல் பக்கத்தில் இருப்பவர்களிடமிருந்து நமக்குத் தொற்றாமல் இருக்க, முன்கூட்டியே மாத்திரைகள் அல்லது ஊசி போட்டுக் கொள்ளலாமா? அப்படி ஏதாவது தற்காப்பு முறைகள் இருக்கிறதா?

குழந்தைகள் நலம் மற்றும் நோய் தொற்றுக்கான மருத்துவர் சரவணகுமார்:

''ஜலதோஷம் அல்லது தும்மல் என்பது ஒரு சாதாரண வைரஸ் தொற்றால் உண்டாகக் கூடியது. அது தானாகவே பெரும்பாலும் சரியாகி விடக் கூடியது. இந்த ஜலதோஷத்தாலோ அல்லது தும்மலாலோ பெருமளவு சேதமோ, பாதிப்போ ஏற்படுவதில்லை. ஜலதோஷம் அல்லது தும்மல் வராமல் பார்த்துக் கொள்ள பிரத்யேகமான ஊசிகளோ, மாத்திரைகளோ இல்லை. ஒருவருக்கு ஜலதோஷம் இருக்கிறதென்றால், அவர் தனியாக கர்சீப் வைத்துக் கொள்ள வேண்டும். அவர் தும்மும் போதும், இருமும் போதும், கர்சீப்பால் தம் வாயையும், மூக்கையும் மூடிக் கொள்ள வேண்டும். அதைப் போலவே ஒருவர் தும்மும் போது பக்கத்தில் இருப்பவர்கள் தங்களது மூக்குப் பகுதியை கர்சீப்பால் மூடிக் கொள்வதுதான் ஜல தோஷம் பரவாமல் தற்காத்துக் கொள்ள சிறந்த வழி.''

# மெட்ராஸ் ஐ-க்கு தமிழ் மருந்து!

செல்விராணி, கும்பகோணம்

கண் பராமரிப்பில் படிகாரம் ரொம்ப உபயோகமானது என என் தோழி சொல்கிறாள். இது உண்மையா?

சித்த மருத்துவர் நாராயணன்:

''ஆம். உங்கள் தோழியின் கூற்று சரியே. கண் பராமரிப்பில் படிகாரம் சிறந்த மருத்துவப் பொருளாகப் பார்க்கப் படுகிறது. இதை ஒரு anti bacterial agent என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். எந்த விதமான காயங்களையும் ஆற வைக்கக் கூடிய ஆற்றல் படைத்தது படிகாரம். குறிப்பாக, கண்களில் ஏற்படும் மெட்ராஸ் ஐ போன்ற தொற்றுகளுக்குப் படிகாரம் ஒரு சிறந்த மருந்து. படிகாரத்தைப் பொடி செய்து பன்னீரோடு கலந்து அதை ஐ ட்ராப் போல கண்களில் போட்டுக் கொண்டு வந்தால், மெட்ராஸ் ஐ குணமாகும். கண்களில் ஏற்படும் புரை பரவாமல் இருக்கவும் இந்தப்


* மருத்துவர் ஜெயஸ்ரீ கோபால்


* மருத்துவர் நாராயணன்


* மருத்துவர் சரவணகுமார்

படிகாரம் உதவி புரிகிறது.

சேகர், கூடலூர்

கொசுக்களின் தொல்லை அதிகமாக எங்கள் வீட்டைச் சுற்றி இருக்கிறது. இயற்கையான முறையில் கொசுக் கடியிலிருந்து தப்பிக்க ஏதாவது வழி இருக்கிறதா?

''உங்கள் வீட்டைச் சுற்றி முதலில் தண்ணீர் தேங்காமல் பார்த்துக் கொள்ளுங்கள். கொசுக்கள் உற்பத்தியாவதும், தங்குவதும் தேங்கி நிற்கும் தண்ணீரில் தான். உங்கள் வீட்டைச் சுற்றித் தேங்கி இருக்கும் தண்ணீரில், மண்ணெண்ணெய் தெளியுங்கள், லெமன் க்ராஸ் எண்ணெய் கிடைத்தாலும் தெளிக்கலாம். இவை கொசுக்களை ஒழித்து விடக்கூடிய தன்மை வாய்ந்தது. கொதிக்க வைத்த தண்ணீரில் நொச்சி இலையையும், citronella எண்ணெயையும் கலந்து அந்த ஆவியைக் கொசுக்கள் இருக்கும் இடத்தில் காட்டினால், கொசுக்கள் வராது.''

இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்

சர்க்கரை நோயாளிகள் இரவில் பால் சாப்பிடக் கூடாது என்று சொல்கிறார்களே இது சரியா? அதைப் போலவே சர்க்கரை நோயாளிகள் கேரட் காயைச் சாப்பிட்டால், சர்க்கரை அளவு ஏறிவிடும் என்கிறார்களே, சர்க்கரை நோயாளிகள் கேரட்டை சாப்பிடலாமா?

நீரிழிவு நோய் நிபுணர்

ஜெயஸ்ரீ கோபால்:

''பச்சைக் கேரட்டை அப்படியே சாப்பிடுவதால், நிச்சயமாக ஒருவருக்கு இரத்தத்தில் சர்க்கரை அள்வு ஏறிவிடாது. மாறாக அதில் உள்ள நார்ச்சத்து, நம் உடல் ஆரோக்கியத்துக்குப் பெரிதும் உதவிடும். அதேபோல பால், தயிர் சாப்பிடுவதாலும் சர்க்கரை அளவு ஏறாது. சில காய்கறிகளான, பீட்ரூட், சர்க்கரைவள்ளிக் கிழங்கு மற்றும் கிழங்கு வகைகளை அதிக அளவில் சர்க்கரை நோயாளிகள் எடுத்துக் கொள்ளக் கூடாது. வாரம் ஒருமுறை, எண்ணெயில் அதிகம் வறுக்காமல் இதை உட்கொள்ளலாம்.''

தொகுப்பு: நளினி சம்பத்குமார்



# கல்கி கிளினிக்

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்ஃபோனில், kacli என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி, பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.



# கல்கி



2010 நவம்பர் 21
விக்ருதி கார்த்திகை 5
மலர் : 69
இதழ் : 17

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## அமெரிக்காவுக்கு அவல்; இந்தியாவுக்கு உமி!

**ஒ**ரே பயணத்தில் இந்தியா, பாகிஸ்தான் இரு நாடுகளுக்கும் செல்வதுதான் அமெரிக்க அமைச்சர்களுக்கும் ஜனாதிபதிகளுக்கும் வசதி, வழக்கமும்கூட. ஆனால் ஒபாமா, பாக். விஜயத்தைத் தவிர்த்திருக்கிறார். அவரது உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடும் என்பதால், பாதுகாப்பு அதிகாரிகள் தற்போது பாக். செல்ல வேண்டாம் என்று அறிவுறுத்தியிருக்கக்கூடும்! ஒபாமா இந்தியா வருவதற்குச் சில நாட்கள் முன்னதாகத்தான் அல்கைதாவின் ஒரு சதித் திட்டம் முறியடிக்கப்பட்டது. சரக்கு விமானத்தில் வெடிகுண்டுகள் பதுக்கி வைத்தது கண்டறியப்பட்டதால் இது சாத்தியமாயிற்று!

ஆனால், பாகிஸ்தானுக்கு ராணுவ உபகரணங்களை அள்ளித் தருவதை மட்டும் அமெரிக்கா நிறுத்தாமல் தொடர்கிறது. 9/11 நியூயார்க் தாக்குதலுக்குப் பிறகு மட்டுமே 13.5 பில்லியன் டாலர் மதிப்புள்ள உயர் ரக ராணுவ உபகரணங்களை அந்நாட்டுக்கு அமெரிக்கா வழங்கியிருக்கிறது. இன்னும் இரண்டு பில்லியன் மதிப்புக்கு இவ்வுதவி வழங்க, சென்ற மாதம் உறுதியும் அளித்திருக்கிறது.

இத்தனை ஆயுதங்களும் பயங்கரவாதத்தை எதிர்த்துப் போராடத்தான் பாகிஸ்தானுக்கு அளிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், பயங்கரவாதம் என்னவோ பாகிஸ்தானிலும் சரி, அதன் தூண்டுதலால் இந்தியாவிலும் சரி, தொடர்ந்துகொண்டுதான் இருக்கிறது. உலகளாவ வளர்ந்து அமெரிக்காவையும் அச்சுறுத்துகிறது!

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா வழங்கும் ஆயுதங்கள் இந்தியாவுக்கு எதிராகவும் பயன்படக்கூடிய வாய்ப்பு உண்டு என்பதால் இந்த நவீன






ஆயுதங்களின் அச்சுறுத்தலுக்கு எதிராக, இந்தியா தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய ட்டாயத்தில் இருக்கிறது. எனவே, பல ரக ராணுவ உபகரணங்களை அமெரிக்காவிடமிருந்து வாங்க நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளது.

இந்த நிர்ப்பந்தத்தின் விளைவுதான் சமீபத்திய ஒபாமா விஜயத்தின்போது கையெழுத்தான ராணுவப் பரிவர்த்தனை ஒப்பந்தம்! இந்தியா 11 பில்லியன் டாலர் கொடுத்து அமெரிக்கப் போர் விமானங்களை வாங்கப் போகிறது என்பதுடன் அமெரிக்க விமானப்படை விமானங்கள் இந்தியாவில் தரையிறங்கி எரிபொருள் நிரப்ப அனுமதிக்கப் போகிறது; அமெரிக்க கடற்படைக் கப்பல்கள் இந்திய துறைமுகங்களைப் பயன்படுத்த அனுமதிக்கப் போகிறது.

இதனால் இந்தியாவுக்கு என்ன லாபம் என்று பார்த்தால், "நீ அவல் கொண்டு வா, நான் உமி கொண்டு வருகிறேன்," என்ற கதைதான்! அமெரிக்காவின் யுத்த முனைப்புகளுக்கு இந்தியா தன்னை ஒரு கருவியாக ஒப்புக்கொடுத்திருக்கிறது என்பதுடன் போர்க் கருவிகள் உற்பத்தி, விற்பனையைப் பெரிதும் சார்ந்து நிற்கும் அமெரிக்கப் பொருளாதாரத்தை வளப்படுத்த உதவப் போகிறது. அமெரிக்காவோ, பாகிஸ்தானுக்கு இலவச ராணுவ உதவி என்ற சின்ன மீனைப் போட்டு, இந்தியாவிடம் ஏராளமான போர்த் தளவாடங்கள் விற்பனை என்ற பெரிய மீனைப் பிடித்துவிட்டது.

இது போதாதென்று இந்திய நுகர்வோர் சந்தையைக் குறி வைத்துச் சில ஒப்பந்தங்களை படிவமைத்து, கையெழுத்திட வைத்துள்ளது அமெரிக்கா. அந்நாட்டின் வேலையின்மைப் பிரச்னைக்கு இந்தியப் பொருளாதாரத்தின் வலிமையைப் பயன்படுத்தித் தீர்வு தேடியிருக்கிறது. அணு உலை நிறுவும் ஒப்பந்தங்கள் இந்தியாவுக்கு மிகப் பாதகமானவை. ஆனால் வேலை வாய்ப்பு நோக்கில் அமெரிக்காவுக்கு ஆதாயமானவை. கொஞ்சமும் தொலைநோக்கின்றி இந்தியா இவற்றில் கையொப்பமிட்டுள்ளது.

காந்திஜியைத் தமது ஆதர்சமாகக் குறிப்பிடும் ஒபாமா, ஆத்ம பரிசோதனை செய்ய வேண்டும். வியட்நாம், ஆஃப்கானிஸ்தான், ஈராக் என்று பிற நாட்டு விவகாரங்களில் அமெரிக்கா மூக்கை நுழைப்பது என்ன நியாயம்? தமது நாட்டின் ராணுவத் தளவாட பொருளாதாரத்தைக் காப்பாற்ற உலக அமைதியை பலி கொடுப்பது எவ்வாறு தர்மமாகும்?

போர்க்கருவி உற்பத்தி சார்ந்த அமெரிக்கப் பொருளாதாரத்தை இரவோடிரவாக மாற்றுவது சாத்தியமில்லைதான். ஆனால், அதை நோக்கி ஓர் அடியாவது எடுத்து வைக்கிறபோதுதான் ஒபாமா உண்மையான காந்தி பக்தர் ஆவார்.

'பட்டுப் பாவாடை சரிகைச் சட்டை
பாதங்களில் கொலுசுப் பட்டை
ஐந்து வயதிருக்கும் அப்போது...'

அந்த ஐந்து வயதுச் சிறுமி ஒரு திருவிழாவில் தொலைந்து போகிறாள். பிறகு அவளைத் தேடிக் கண்டுபிடித்து விடுகிறார்கள். அவள் பெரியவளாகித் திருமணமும் நடைபெறுகிறது. அது பற்றி அவள் சொல்கிறாள்:

'என் பெயரே மறந்து போனேன் - என்
மணவிழாவில் நான்
தொலைந்துபோனேன்
ஆனால் யாரும் என்னைத்
தேடவேயில்லை!'

இந்த வரிகளை எழுதியவர் கவிஞர் தாமரை. 'தொலைந்து போனேன்' என்ற தலைப்பிலான இக்கவிதையின் பொருள்- ஆணாதிக்கச் சமூகத்தில் மணவுறவின் மூலம் பெண் தன் அடையாளத்தை இழந்துவிடுகிறாள் என்பதே.

எங்கள் உறவினால் கவிஞர் தாமரை தொலைந்துபோய்விடவில்லை. இன்னும் முக்கியமாக, நானும் தொலைந்து போய்விடவில்லை. இதைத்தான் எங்கள் வாழ்க்கையின் வெற்றியாகக் கருதுகிறேன்.

இல்லறத்தில் இணைவதை 'ஒரு மனதாயினர்' என்று சொல்வதுண்டு. ஒருவர் மற்றவர்க்கு முழு அடிமை ஆவதன் மூலமே இரு மனங்கள் ஒரு மனதாவது நிகழும். தனித் தனி மனிதர்கள், தனித் தனி ஆளுமைகள் என்ற நிலை மணவுறவினால் அற்றுப் போகும் என்றால் அது மனித உரிமை மீறலே. இரு ஆளுமைகள் ஒன்றாகி விட வேண்டாம், ஒன்றுக்கொன்று துணை நிற்பதே சிறந்தது. என் ஆளுமையில்




# அக்கறை மட்டோட்டா!



-தியாகு

> எங்கள் உறவினால் தாமரை தொலைந்துபோய்விடவில்லை. நானும் தொலைந்துவிடவில்லை



கவிஞரின் தாக்கமும், கவிஞரின் ஆளுமையில் என் தாக்கமும் இருப்பதும் வளர்ந்து செல்வதும் மெய்.

இலக்கியம்தான் எங்களைச் சந்திக்க வைத்தது என்பதை நாங்கள் மறப்பதில்லை. துறைகள் வேறு, எழுத்து வடிவங்களும் வேறு என்றாலும் இலக்குத் தப்பாத இலக்கியம் என்பதில் ஒன்றுபடுகிறோம். அவரின் கவிதைகளுக்கு முதல் திறனாய்வு என்னிடமிருந்தே வரும். சில நேரம் ஏற்கப்படும். என் பேச்சையும் எழுத்தையும் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் கவனமாகத் திறனாய்வு செய்வார் அவர்.

பணத்துக்காக எதையும் எழுதுவது இல்லாத இலக்கியம் அவரது. பதவிக்காக எதுவும் செய்வது இல்லாத அரசியல் எனது.

தமிழின உணர்வுதான் எங்களை இணைக்கும் வலுவான இழை. இத்தனை ஆண்டுகளில் நாங்கள் மிக நெருக்கமாகச் செயலாற்றிய காலம் என்பது 2008-09ல் ஈழத் தமிழர்கள் மீதான இன அழிப்புப் போர் கொடுமுனைப்புடன் நடைபெற்ற அந்த மாதங்கள்தாம். போரை நிறுத்தக் கோரும் போராட்டங்களில் ஓடி ஓடிப் பங்கேற்றுக் கொண்டிருந்தோம். ஏதாவது நல்ல செய்தி வராதா என்ற ஏக்கம் கலந்த எதிர்பார்ப்புடன் இரவெல்லாம் இணையத்தைத் துழாவிக் கொண்டிருந்தோம்.

2009 மே 16,17,18 - முள்ளிவாய்க்காலில் முழுப் பேரழிவு நிகழ்ந்த அந்த மூன்று நாட்கள் எங்களை நிலை குலையச் செய்தன. ஒருவருக்கு ஒருவர் ஆறுதல் சொல்லிக் கொள்ள முடியாத கொடுந்துயரம்! இதற்கு மேல் ஒரு துக்கம் எங்கள் வாழ்க்கையில் இனி வரப் போவதில்லை. இப்போதும்கூட அம்மக்களுக்கு நீதி கிட்டவும், அவர்களைத் துன்ப வாழ்விலிருந்து மீட்கவும் நடைபெறும் முயற்சிகளில் எங்கள் பங்களிப்பைத் தொடர்ந்து செய்து கொண்டிருப்பதுதான் ஒரே ஆறுதல்.

வீட்டில் எப்போதும் இலக்கியக் காற்று வீசும்போது அது எங்கள் செல்லப் பொடியன் சமரனையும் தொடாமல் விடாது அல்லவா? இந்த எட்டு வயதில், அவன் பாடமல்லாத பலவும் படிக்கிறான், எழுதுகிறான், படம் வரைகிறான். தொலைக்காட்சிக் கதைகளில் வரும் பெயர்களை எங்களுக்குச் சூட்டியிருப்பதோடு தனக்குத் தானேயும் அவ்வாறே சூட்டிக் கொண்டு, அந்தப் பெயர்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்று அடம் பிடிக்கிறான். அவன் 'டிமோன்' என்கிற காட்டுப்பூனை. அம்மா 'சிம்பா' என்கிற சிங்கம். அப்பா 'பும்பா' என்கிற காட்டுப் பன்றி. எங்கள் இல்லம் காடு. அங்கு எங்களுடையது அக்கூனா மட்டாட்டா' என்கிற கவலையற்ற வாழ்க்கை முறை (?)!

கார்ல் மார்க்ஸ் குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் வரும் கதை மாந்தர்களின் பெயர்களால் அழைக்கப்பட்டதாகப் படித்துள்ளேன். எங்கள் வீட்டில் காட்டு விலங்குகளின் கற்பனைப் பெயர்களோடுதான் உலவுகிறோம். இக்காலத்தில் நாட்டினும் காடு மேல்தானே!

படங்கள்: ஸ்ரீஹரி

கனவு பல காட்டல்!

# நான் கூட இல்லை!


நகுலன்




புதுக்கவிதை இலக்கிய அரங்கில் தோற்றம் பெறுகிற வரை கவிதை பற்றிய சிந்தனை எல்லாம் அதன் இலக்கணத்தைப் பற்றியதாகவே இருந்துவந்தது. அசை, சீர், தளை பற்றிய அறிவு பிழையறப் பெற்றிருந்தால் கவிதை முடிந்தது என்ற எண்ணம் நிறைந்திருந்தது. இப்படி அமைந்த கவிதை சொல்ல வந்த விஷயம் பற்றிப் பெரிதாக எதுவும் பேசப்படவில்லை. 'நீங்களும் பாடலாம்' என்றால் அசை, சீர், தளை பற்றிக் கற்றுக்கொள்ளலாம் என்றே பொருள் பட்டது. பல யாப்புக் கவிதைகள் ஓசை விஷயத்தில் இடர்பட்டிருப்பதை அறியக்கூடியவர்கள் இல்லை என்றே சொல்லிவிடலாம்.

கவிதையின் செயல் திறனிலிருந்து அது சொல்ல வந்த விஷயத்துக்குக் கவனத் தைத் திருப்பியது புதுக் கவிதை. வாழ்க்கையின் சிக்கலும் சிடுக்கும் நிரம்பியதாக இருக்க வேண்டும் என்று க.நா.சு. முன்மொழிந்தார். அவருடைய கவிதைகள் பலவும் அப்படி அமைந்திருந்தன. அவற்றின் வெளியீடு, எழுதிய அவருக்கே சிக்கலும் சிடுக்கையும் தந்தன என்றால் மிகை அல்ல.

கவிஞனின் வெளியீட்டு மன இயல் ஒன்றை க.நா.சு. தான் எழுதிய கவிதைகளில் எடுத்துக் காட்டினார்:

*அழுவதும் சிரிப்பதும் கூட*
*வெற்றிலை போடுவது*
*பத்திரிகை படிப்பது போலப்*
*பழக்கத்தினால்*
*வருகிற காரியங்கள் ஆகிவிட்டன.*

என்று ஒரு கவிதையில் எழுதுகிறார் க.நா.சு. இயல்பாகத் தடையைத் தகர்த்து வெளியாகும் உணர்ச்சிகூடப் பழக்கமாகி விட்டது என்கிறார் க.நா.சு. அப்படியானால் உண்மை நிலை நசுக்கப்பட்டிருக்கிறது என்றுதானே பொருள்.

3

க.நா.சு.வைத் தொடர்ந்து நகுலனும் வாழ்க்கையின் சிக்கல் சிடுக்குகள் பற்றி எழுதியிருக்கிறார். இலக்கியத்தில் வெற்றி பெற்றவர்கள்,

தோற்றவர்கள்; தோற்றவர்கள் வெற்றி பெற்றவர்கள் என்ற கருத்து உண்டு. பல்லாயிரக்கணக்கான வாசகர்களைத் தன் வாழ்நாளில் பெற விரும்பாத படைப்பாளிகளில் நகுலன் ஒருவர்.

*கவிதை எழுதுகிறேன்; படிக்கத்தான்*
*யாருமில்லை*
*நாவல் எழுதி நானே பிரகரித்தேன்*
*வாங்கத்தான் யாருமில்லை.*

இலக்கியத்தில் நிலை இப்படி உள்ளதாகக் கூறும் நகுலனின் கவிதைகள் ஆழமானவை.

*அன்றொரு நாள்*
*நின்னைத் தெருவில்*
*கண்டேன்*
*கண்ணம்மா.*
*வேறொரு நாள்*
*ஒருவர் சொன்னார்*
*அன்று நான் கண்டது*
*நின்னை அன்றென்று*

எவ்வளவு துயரமான கவிதை இது. 'நீ பார்த்துவிட்டு வந்தது சீதை இல்லை' என்று சொல்லப்பட்டால் அநுமனுக்கு எப்படி இருக்கும்?

நகுலன் கவிதையிலிருந்து மேலும் சில வரிகள்:

*காஃப்காவிடம் அவன் நண்பர்கள்*
*முதல் உலக மகா யுத்தம் தொடங்கி*
*விட்டது என்று சொன்னதும் அவன்*
*சிரி சிரி என்று சிரித்தானாம் என்று*
*ஒரு வதந்தி.*

*என்னுடன் ஒருவருமில்லை; நான்கூட இல்லை. எவ்வளவு சுகம்!*


காஃப்கா

**(அடுத்த வாரம் பார்ப்போம்)**


'1 B' வகுப்பில்




கல்லூரிக் காலங்களில்...


பெண்ணியம் வரைதல்...


25 வருட தோழி!

# எனது நினைவோடையில்...

"இனி வரும் காலத்தில் தாமரையை
தமிழ்ச் சமுதாயம் ஒரு
'சமூகப் போராளி'யாக அடையாளம்
காட்டுவதே எங்களுக்குப் பெருமை!"

- தோழி... தங்கம் சந்திரகுமார்





வள்ளுவன் பாதையில் நல்லறம்!

படம்: ஸ்ரீஹரி





சினிமா எனக்குத் தொழில்!



தமிழுக்கான போராட்டங்களில்...

அருண்சரண்யா

**"போ**ன வருடம் என்ன?'' என்று ராமநாதன் கேட்டார். உடனே சட்டென்று ''நான் தமிழ் ஆண்டைக் கேட்கிறேன்'' என்றார்.

''விரோதி வருடம்'' என்றேன்.

''சரியாக 360 வருடங்களுக்கு முன்னால், இதேபோன்ற விரோதி வருடத்தில் பங்குனி மாதம் உத்தராயண நட்சத்திரத்தில் துகாராம் சுவாமிகள் மனித உடலோடு வைகுண்டம் சென்றார்'' என்றார்.

''ஆங்கிலத் தேதியும் சொன்னால் நன்றாக இருக்கும்'' என்று ஏதோ குறிப்பெடுத்துக் கொள்ளும் ஆராய்ச்சியாளன் போல ஜருகண்டி கூறினான்.

''மார்ச் ஒன்பதாம் தேதி. வருடம் 1650'' என்றார் ராமநாதன் அசராமல். பின் மௌனமாக நடக்கத் தொடங்கினார். அவர் மனத்தில் மகான் துகாராம் குறித்த பக்தி உணர்வுகள் தோன்றியிருக்க வேண்டும்.

ஆனால் ஜருகண்டியின் பொறுமை கரைந்துவிட்டிருந்தது. ''நீங்கள் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்றான்.

''துகாராமின் அபங்கங்களை நினைத்துக் கொண்டிருந்தேன். அடுத்து நாம் தரிசனம் செய்ய வேண்டிய துல்ஜாபூர் பவானி அம்மனைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தேன்'' என்றார் ராமநாதன்.

''நான் அதைக் கேட்கவில்லை. தன் குரு துகாராமின் பிரிவைத் தாங்கமாட்டாமல் நிளோபா 42 தினங்கள் உணவின்றித் தியானத்தில் ஈடுபட்டார் என்றீர்கள். பாண்டுரங்கன் அவர் முன் தோன்றி சமாதானப்படுத்தியபோது ஒரு அபங்கம் பாடினார். அது எதிர்பாராதது என்றீர்கள். அதன் விளக்கத்தைச் சொல்லாமல் நீங்கள் பாட்டுக்கு வேறு எது எதையோ சொன்னால் என்ன அர்த்தம்? நீங்கள் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் எங்களைப் பற்றி?'' என்றான்.

''ஓ விஷயம் இதுவா?'' என்றபடி ராமநாதன் விஷயத்துக்கு வந்தார்.

''பாண்டுரங்கனே வந்தபோதிலும் அது குறித்து மெய்சிலிர்க்கவில்லை நிளோபா. தன் குரு தன்னிடம் கூறாமலேயே இந்த உலகை நீத்ததுதான் அவருக்குப் பெரும் துன்பமாக இருந்தது. அந்த வேதனைக்



கோபத்தில் அவர் இயற்றிய அபங்கத்தின் பொருள் இதுதான். 'தேவா! உன்னை இங்கு வரச் சொல்லி, யார் சொன்னார்கள்? உன்னை நான் பிரார்த்திக்கவில்லையே. பிரகலாதன் மிகவும் விபரீதமான நிலையில் இருந்ததால் தூணிலிருந்து தோன்றி இரணியனைக் கொன்றாய். எனக்கொன்றும் அந்த மாதிரியான சங்கடங்கள் எதுவும் நேரவில்லையே. பின் எதற்காக இங்கு வரும் சிரமத்தை மேற்கொண்டாய்? என் குரு துகாராமை என்னிடம் அனுப்பி வை. அதுவே போதும்.''

''என்னது, விட்டலனே நேரில் வந்தும் அவர் வேண்டாம், துகாராம்தான் வேண்டும் என்றாரா? பாண்டுரங்கன் ரொம்பவும்தான் எல்லோருக்கும் இடம் கொடுத்திருக்கிறார்'' என்று ஜருகண்டி வியந்தான்.

''நிளோபாவின் குருபக்தியை விட்டலன் ரசித்தான். நிளோபாவுக்குத் துகாராமின் தரிசனமும் கிடைக்கச் செய்தான்'' என்றார் ராமநாதன்.

**து**ல்ஜாபூரில் உள்ள அன்னை பவானியின் ஆலயம் மிக விசேஷமானது. சத்ரபதி சிவாஜிக்கு நேரடியாகக் காட்சி தந்து வீரவாள் அளித்த தேவி.

சஹ்யாத்ரி என்ற மலைத்தொடரில் அமைந்துள்ள தொன்மையான ஆலயம். அதை நோக்கித்தான் நடந்து கொண்டிருந்தோம்.

மிகவும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தது துல்ஜாபூர். வழி

# சமர்த்தாள் சக்தி!



நெடுக நிறையத் தங்குமிடங்கள். அவற்றில் பெரும்பான்மையானவை நவீனமாகக் காட்சி அளித்தன. பேருந்து நிலையத்திலிருந்து ஆலயத்தை அடைய சுமார் ஒரு கிலோமீட்டர் நடக்க வேண்டும். வழிநெடுக நிறையக் கடைகள். பெரும்பாலானவை சுற்றுலாப் பயணிகளைக் குறிவைத்த கடைகள்.

ஆலயத்துக்குள் நுழைவதற்குப் பல படிகளில் இறங்க வேண்டியிருந்தது. அத்தனையும் மிகவும் அகலமான படிகள். அருகே காணப்பட்டது ஒரு திருக்குளம். கல்

லோல தீர்த்தக்குளம் என்கிறார்கள். இதில் பாரதத்தின் நதிகள் அனைத்துமே சங்கமிப்பதாக ஒரு நம்பிக்கை.

''நமது இந்த விஜயத்தில் பாண்டுரங்கன் தொடர்பில்லாத இடம் என்றால் இது ஒன்று தான்'' என்றான் ஜருகண்டி.

''பாண்டுரங்கனுக்குத் தொடர்பில்லாத இடமும் உண்டா?'' என்று கேட்டார் ராமநாதன்.

''நீங்கள் தத்துவார்த்தமாகப் பேசுகிறீர்கள். நான் யதார்த்தமாகக் குறிப்பிட்டேன்'' என்றான்.

அவன் குரலில் கலந்திருந்த லேசான எரிச்சலை ராமநாதனால் கண்டுகொள்ள முடிந்தது. ''பொதுவான கோணத்திலே கூட இந்த ஆலயத்துக்கும் விட்டலனுக்கும் தொடர்பு உள்ளது'' என்றார் அவர்.

ஜருகண்டியின் முகத்தில் தோன்றிய குழப்பம் சட்டென்று உற்சாகமாக மாறியது. 'புரிந்துவிட்டது. இந்த ஆலயத்தில் அம்மன் யார்? பவானி. அவள் யாருக்கு வீரவாள் கொடுத்தாள்? சத்ரபதி சிவாஜிக்கு. சிவாஜி யாருடைய அபங்கங்களுக்கு அடிமையானார்? துகாராம் எழுதிய பாடல்களுக்கு. ஆக ஒரு தொடர்பு உறுதியாகிவிட்டது இல்லையா?'

''வேறொரு விதத்திலும் தொடர்பு உண்டு. சமர்த்தாக யோசித்தால் உனக்கே அது தெரியும்'' என்று புன்னகைத்தார் ராமநாதன்.

பல படிகள் இறங்கியபிறகு சில படிகள் மேலே ஏற வேண்டியிருக்கிறது. யாக மண்டபம் ஒன்று தென்பட்டது. அருகே சிறிய அளவில் ஒரு காளி உருவம். பலரும் அருகில் நின்று எண்ணெய் சாஷேக்களை வாங்கி தீபம் ஏற்றுகிறார்கள்.

நாங்கள் சென்றது வெள்ளிக்கிழமை. காலை மணி பத்தரை. ஆலயத்தில் அப்படியொரு கூட்டம். மிக நீண்ட வரிசை. சிறப்பு வரிசை என்ற தனியான ஒன்று அந்த ஆலயத்தில் இல்லாததைக் குறிப்பிட வேண்டும். வரிசையில் நிற்கத் தொடங்கினோம். நிற்பதும் அசைவதுமாக இயங்கியது வரிசை.

அம்மனை தரிசனம் செய்ய எப்படியும் ஒன்றரை மணி நேரமாகுமென்று தோன்றியது.

அதையே ஒரு நல்வாய்ப்பாகக் கருதினோம். காரணம் பவானி அம்மன் உருவான பூர்வகதையைக் கூறத் தொடங்கினார் ராமநாதன்.

கரதமன் என்ற முனிவரும் அவரது மனைவி அனுபூதியும் இணைந்து வாழ்ந்தனர். ஆனால் விதியின் காரணமாக அந்த முனிவர் இளமையிலேயே இறந்துவிட்டார். இளம் வயதிலேயே விதவை ஆனாள் அனுபூதி. அக்கால வழக்கப்படி உடன்கட்டை ஏற முடிவெடுத்தாள். ஆனால் அக்காலத்தில் வேறொரு நடைமுறையும் இருந்தது. கர்ப்பம் தரித்த பெண்களுக்கு உடன்கட்டை ஏறும் தகுதி இல்லை. வயிற்றில் வாரிசைச் சுமந்திருந்த அனுபூதி

## அபங்க அமுதம்

**ஆஹீஜாதோ துஹீக்ருபா அஸோத்யாவீ**
**ஸகளா ஸாங்காவீ வினந்தி மாஜீ**
**வாடவேள ஜாலா உபா பாண்டுரங்க**
**வைகுண்டா ஸ்ரீரங்க போலாவிதோ**
**அந்தகாளீவிடோ ஆஹாஸீ பாவலா**
**குடீஸஹித ஜாலா குப்த துகா**

**- பக்த துக்காராம்**

''மக்களே, நான் வைகுண்டம் போகிறேன். நீங்கள் தயவு செய்து நான் இங்குள்ள எல்லோரையும் கேட்டதாகச் சொல்லுங்கள். பாண்டுரங்கன் எனக்காக வெகுநேரம் காத்திருக்கிறான். ஸ்ரீரங்கன் என்னை வைகுண்டத்துக்கு அழைத்துச் செல்ல வந்துள்ளான். என் விட்டலன் எனக்குக் கிடைத்துவிட்டான். நான் இந்த உடலோடு மறையும் பாக்கியம் பெற்றேன்.''





உடன்கட்டை ஏறுவது தடுக்கப் பட்டது.

நாளடைவில் ஓர் ஆண் குழந்தையைப் பெற்ற அனுபூதி, அந்தக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பைத் தம் கணவருடன் நட்பாக இருந்த முனிவர்கள் சிலரிடம் ஒப்படைத்தாள். வனம் சென்றாள். கடும் தவத்தை மேற்கொண்டாள்.

தவம் செய்யச் செய்ய அவள் உடல் மெலிந்தது. எனினும் அவள் உடலில் தேஜஸ் கூடிக்கொண்டே வந்தது. அந்தப் பக்கமாக யார் சென்றாலும் தவம் புரியும் அனுபூதியைக் கையெடுத்துக் கும்பிட்டுச் சென்றனர்.

ஆனால் அந்தப் புறமாகச் சென்ற குக்குரா என்ற அசுரனுக்கு மட்டும் அனுபூதியைக் கண்டதும் 'அந்தப்புர ஆசை' வந்தது. அனுபூதியின் அழகு அவனைச் கண்டிமிழுத்தது. அவள் அருகில் சென்றான். தவத்தைக் கலைத்தான். ''எதற்கு இந்தத் துன்ப வாழ்க்கை? உன் கணவன் இறந்தால் என்ன? நான் இருக்கிறேன் அதை ஈடு செய்ய'' என்றான் விகாரமாகச் சிரித்தபடி.

அனுபூதி துயரம் கொண்டாள். தொடக்கத்தில் நல்வார்த்தைகள் கூறினாள். அசுர மூளை அதை ஏற்கவில்லை. பின் கோபத்தில் வார்த்தைகளை உதிர்த்தாள்.

''அடடா, இப்போது நீ மேலும் அழகு'' என்றபடி அவளை நெருங்கினான்.

கௌரவர் சபையில் பாஞ்சாலி 'கண்ணா அபயம்' என்று கதறியதைப் போல அனுபூதியும் செயல்பட்டாள். அவள் உதவிக்கு அழைத்தது ஆதிபரா சக்தியை.

குக்குராவுடன் போர் செய்ய ஆதிபராசக்தி முன்வந்தாள். அவளது போர்க்கோலமே உக்கிரமாக இருந்தது. எட்டு கரங்கள். அவற்றில் எட்டு ஆயுதங்கள். பலவித உருவங்களை எடுத்துக்கொண்டான் அசுரன். ஒவ்வொன்றாக அவற்றை எதிர்த்த சக்தி, அந்த அசுரனை வதம் செய்தாள்.

மெய்சிலிர்த்தாள் அனுபூதி. தன்னைக் காக்க வந்த சக்தியிடம் ஒரு வரம் கேட்டாள். அந்தக் கோரிக்கைக்காகவே நாம் அனைவரும் அனுபூதியின் பாதங்களை மனத்தில் சேவிக்க வேண்டும்.

''தேவி, நீ இங்கேயே எழுந்தருள வேண்டும். பக்தர்களின் குறை தீர்க்க வேண்டும்'' என்றாள். சம்மதித்தாள் சக்தி. அவள்தான் துல்ஜாபூர் பவானி.

தலபுராணத்தை முடித்த ராமநாதன் இப்போது ஜருகண்டியைப் பார்த்துப் புன்னகைத்தார். ''இந்த ஆலயத்தோடு பெரிதும் தொடர்பு கொண்ட சிவாஜிக்கும் வேறொரு விட்டல பக்தருக்கும் தொடர்பு உண்டு. அவர் யார் கண்டுபிடிக்க முடிந்ததா?'' என்று கேட்டார்.

'சமர்த்தாக யோசி' என்று அவர் முன்பு கூறியது நினைவுக்கு வந்தது. சத்ரபதி சிவாஜியின் குருவும் அமைச்சருமான சமர்த்த ராமதாஸர் என் மனக் கண்ணில் தோன்றினார்.







# தி சோஷியல் நெட்ஒர்க்

**ஃபே**ஸ்புக் தொடங்கப்பட்ட 2003லிருந்து ஒரு மில்லியன் பயனீட்டாளர்களை அது அடைவதுவரையிலான நிகழ்வுகளை காதல், காமம், கல்லூரி வாழ்க்கை, துரோகம், நட்பு எனப் பலவகையாக அள்ளித் தெளிக்கிறார் கதாசிரியரான ஆரண் சேர்ஜின்.

20 வயதான அவன் எவருடனும் எளிதில் நட்பு கொள்ள முடியாத ஒருவிதத் தனிமை விரும்பி என்றாலும், தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளை மிகக் கூர்மையாகக் கவனித்து அலசும் திறன் அவனிடம் உண்டு. தனிப்பட்ட விதத்தில் நட்பு வட்டம் இல்லையென்றாலும், மனித நட்பு வட்டங்களைப் புரிந்துகொண்டு அவர்களது சமூக கஷ்டங்களை இணையத்தில் இலகுவாகக் கொண்டு வர முடிந்ததை விரிவாகச் சொல்லியிருக்கும் இடங்கள் பிரமிக்க வைக்கின்றன.

*(எப்படியெல்லாம் யோசிச்சு படம் எடுக்கிறாங்க... ம்ம்... இந்த கோலிவுட் எப்பதான் திருந்துமோ?)*

# ஃப்பாஸ்டர்



**ச**கோதரனை ஏமாற்றிக் கொலை செய்துவிட்டுப் பழியைத் தம் மீது சுமத்தியிருக்கிறார்கள் எதிரிகள். செய்யாத தவறுக்கு டிவானி ஜான்சனுக்குப் பத்தாண்டுகள் தண்டனை. சிறையில் இருக்கும் அத்தனை நொடிகளையும் தியானத்திலேயே கழிக்கிறான். இலக்கை பட்டை தீட்டுவதிலேயே செலவிடுகிறான். குறித்த நேரத்தில் அவன் விடுதலை அடைகிறான். தன் சகோதரன் எங்கெல்லாம் செல்வான்; யாரையெல்லாம் சந்திப்பான்; யாருடன் எல்லாம் பேசுவான் என்று ஒரு லிஸ்ட் போட்டு ஒவ்வொருத்தரையும் சந்திக்கிறான்.

அவனது பழிவாங்கும் பயணத்தில் யார் யாரெல்லாம் குறுக்கிடுகிறார்கள்; பல தடைகளைத் தாண்டி உண்மையான கொலையாளியை அவன் கண்டுபிடித்தானா, பழி வாங்கினானா என்பதே கதை!

இப்படத்தின் ஹீரோ டிவானி ஜான்சன், பாரம்பரை மல்யுத்த வீரர். நவம்பர் 26 ஆம் தேதி உலகம் முழுவதும் ஒரே நேரத்தில் சோனி பிக்சர்ஸ் இப்படத்தை வெளியிடுகிறதாம்.

*(இந்தப் படத்தைப் பார்த்துட்டுதான் நானும் பழிவாங்கினேன்னு யாரும் சொல்லாம இருந்தா சரி...!)*

**- சித்தார்த்தன்**

# தாமரை என் தோழி!

**- சசிக்குமார்**

தாமரையின் செல்ஃபோன் டியூன் 'கண்கள் இரண்டால்' பாடல்தான். அந்தப் பாடல் இடம்பெற்ற 'சுப்ரமணியபுரம்' படத்தின் இயக்குநர் சசியிடம் கேட்டபோது...

''மூன்று மாதம் தவம் போல பொறுத்திருந்து வாங்கியது தான் 'கண்கள் இரண்டால்...' பாடல். ஒரு சொல்கூட மாற்றாமல் போட்டேன். தாமரை புது வீடு போய் இருந்த சமயம். அவிழ்க்கப்படாத சாமான் மூட்டைகள் ஆங்காங்கே அறை முழுதும் குந்திக் கொண்டு இருக்க அந்தச் சூழலில்தான் காட்சியைச் சொல்லி, எப்போ ரிலாக்ஸ் ஆகி எழுத முடியுமோ அப்போ எழுதுங்க என்றுதான் சொல்லிவிட்டு வந்தேன். சூப்பர் பாடல் தந்தாங்க. அடுத்து 'பசங்க' படத்தில் 'வெட்கம் வருதே' பாடல். செம ஹிட்!



ஆங்கிலம் கலக்காத, ஆபாசச் சொற்கள் சேர்க்காத அவரின் கொள்கைப் பிடிப்பான பாடல் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவர் பெண் என்பது ஒரு பொருட்டல்ல. பால் வேறுபாடு கலைஞர்களுக்குக் கிடையாது. சினிமாவில் திறமைதான் முக்கியம்.



> அடுத்து வரும் என் படத்துக்கு மூணு பாடல் மூணு விதமா தாமரையை எழுத வைக்க ஆசை உண்டு!

காதல் பாடல் இன்றி, தாமரைக்கு வேறு வேறு விஷயங்களுக்குப் பாடல் எழுத சொல்லணும். அடுத்து வரும் என் படத்துக்கு மூன்று பாடல்கள், மூணு விதமாக தாமரையை எழுத வைக்க ஆசையுண்டு. எழுதி முடித்தபின் வரியை மாற்றமாட்டேன்னு அடம் பிடிச்சாலும் நானும் அடம் பிடிச்சு சில வரிகளை மாற்றிக் கொண்டது உண்டு; அது பாடலின் வெற்றிக்கான ஒரு கௌரவமான காம்ப்ரமைஸ்.



அவரின் அரசியல் சூழல் பற்றி நான் கேட்பது இல்லை. அட என்னிடம் அது குறித்துப் பேசியது கூட இல்லை. தாமரை என் தோழி! எங்களை இயக்கும் ஆதாரம் நல்ல சினிமா... அவ்வளவுதான்'' என்கிறார் 'ஈசன்' சசி. (ஈசன், சசியின் புதிய வரவு).

- சூர்யா

**ஜி.ராஜேஷ், அயன்புரம்**

எஸ்.எம்.எஸ்.ஸில் ஷேர் டிரேடிங் டிப்ஸ் தருகிறேன் என்று நிறைய எஸ்.எம்.எஸ்.கள் வருகின்றன. இதை எவ்வளவு தூரம் நம்பலாம்? இதை நம்பி, பங்குகளில் முதலீடுகள் செய்யலாமா?

டி.பாலசுந்தரம்: ஷேர் டிரேடிங் வெற்றிகரமாகச் செய்ய டிப்ஸ் ஒருவரால் எஸ்.எம்.எஸ். மூலம் தரமுடிகிறது என்றால் எதற்காக அவர் அந்த எஸ்.எம்.எஸ். தருவதைத் தொழிலாக வைத்திருக்கிறார்? பேசாமல் அவர் ஷேர் டிரேடிங்கே செய்து அதிகமான பணத்தைச் சம்பாதித்து விடலாமே? ஏன் அவர் அதை விட்டுவிட்டு டிப்ஸ் கொடுக்கும் வியாபாரத்தைச் செய்கிறார்? அவர் டிப்ஸில் அவருக்கே நம்பிக்கை இல்லையா? என்ற கேள்வியை நான் உங்கள் முன் வைக்கிறேன். எனவே, இதுபோன்ற டிப்ஸ்களைக் கடுகளவும் நம்பாமல் இருப்பதே மிகச் சிறந்தது. சந்தையில் முதலீடு செய்யும் உங்கள் பணம் மிகவும் கஷ்டப்பட்டு சம்பாதித்த ஒன்று. அதை முதலீடு செய்யும்போது நீங்கள்தான் அது குறித்த முடிவுகளை எடுக்கவேண்டுமே தவிர மற்றவர்கள் சொல்வதை நம்பி செயல்படக் கூடாது. டிரேடிங்கில் உள்ள லாபம் மற்றும் கஷ்ட நஷ்டங்களைப் புரிந்துகொண்டு வியாபாரம் செய்ய ஆரம்பியுங்கள். உங்களுக்கு வரும் டிப்ஸைக் கொண்டு மட்டுமே முதலீடு செய்யக்கூடாது. அந்த டிப்ஸை உங்களுடைய முதலீட்டுக்குத் தகுந்த கம்பெனிகளைத் தேர்வு செய்யும் ஆராய்ச்சிக்கு ஒரு வழிகாட்டியாக வைத்துக் கொள்ளலாம். அதற்கு மேல் உங்களுடைய உழைப்பும் தேவை.


* டி.பாலசுந்தரம்


* த.ராமலிங்கம்

**அசோகன், பெங்களூரு**

ஒரு சில நகைக் கடைகளில், அன்றைய தங்கத்தின் விலையை விட ரூ.45 குறைவாகக் கொடுக்கிறார்கள். செய்கூலி, சேதாரம் இல்லை என்கிறார்கள். ஆனால், தங்கக் காசு அல்லது கெட்டித் தங்கம் வாங்கினால், இந்தச் சலுகைகள் கொடுக்கப்படுவதில்லை. என்ன காரணம்?

நகையாக வாங்கும்போது நகை செய்யும் தொழில் ரீதியான லாபங்கள் நகையின் விலையில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.



முதலீடு, சட்டம், நுகர்வோர் பாதுகாப்பு சம்பந்தமான கேள்விகளை 'கொஸ்டின் பேங்க
செல்ஃபோனில் KAFIN என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர், ஊ




எனவே, அந்த லாபத்தில் சிறிதளவைக் குறைத்து (தங்கத்தின் விலை, செய்கூலி, சேதாரம் என) தருவதாகச் சொல்கிறார்கள். ஆனால் சொக்கத் தங்கத்தை (காசு, கெட்டித்தங்கம்) வாங்கும்போது அதில் இதுபோன்ற லாபங்கள் கடைக்காரருக்கு இல்லை. அதனால், குறைப்பதற்கும் ஒன்றும் இல்லை. எனவே, அன்றைய சந்தை விலைக்கே அவர்கள் கறாராக விற்கிறார்கள்.

ஜான், ராணிப்பேட்டை

எனக்கு வயது எழுபது ஆகிறது. என் பெயரில் நிலம் வாங்கி வீடுகட்டி வசித்து வருகிறேன். இந்தச் சொத்தை என் இரண்டு மகன்கள் பெயரில் செட்டில்மெண்ட் செய்துவிட்டு, என் பாதுகாப்புக்காக வாழ்நாள் உரிமையை நிறுத்திக் கொள்ள விரும்புகிறேன். ஆனால் அது முடியாது என்கிறார்கள். விளக்கம் கூறுங்கள்?

த. ராமலிங்கம்: தான் சுயமாகச் சம்பாதித்த பணத்தில் கிரயம் பெற்ற சொத்தை எப்படி வேண்டுமானாலும் அனுபவிக்க உரிமை உண்டு. நீங்கள் வாங்கிய சொத்தை, உங்கள் விருப்பப்படியே நீங்கள் தாராளமாக உங்கள் இரண்டு மகன்களுக்கும் செட்டில்மெண்ட் செய்துவிட்டு, உங்கள் விருப்பப்படியே வாழ்நாள் உரிமையையும் உங்கள் பாதுகாப்புக்காக நிறுத்திக் கொள்ளலாம். இதில் எந்தப் பிழையும் இல்லை. சட்டம் இதை அனுமதிக்கிறது.

ன்று குறிப்பிட்டு அனுப்பலாம். kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.
கியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

# வாரம் ஒரு மந்திரம் 3



# மரணத்திலிருந்து தப்ப வைக்கும் தாமரை!

'இந்தப் பிறவியே போதும்; அடுத்தொரு பிறவி வேண்டாம்' என்று கடவுளிடம் பிரார்த்தித்தார் ஒருவர். பிரார்த்தனை செய்யலாம்; ஆனால் அது கண்டிப்பாக நிறைவேற வேண்டும் என்று அவசியமில்லையே! ஒருவேளை, அடுத்தபடியும், பூமியில் பிறந்துவிட்டால்...

# டாக்டர். சுதா சேஷய்யன்



நியாயப்படி பார்த்தால், பிறக்க நேர்ந்துவிட்டால், உடனடியாக இறப்பதற்கு ஆசைப்பட வேண்டும். அப்போதுதான், பிறவாமை நோக்கிச் செல்லலாம். ஆனால், யதார்த்த உண்மை வேறு மாதிரியாக இருக்கிறதே!

இருக்கட்டும்; பிறந்துவிட்டால் போதும்; இறவாதிருப்பதற்கு அற்புதமான வழி கைவசம் இருக்கிறது (இறந்தால்தானே மறுபடி பிறப்பு; அதனால், பிறவாமைக்கும் இதுதான் பொருத்தமான வழி).

இறவாதிருப்பதா? எவ்வாறு சாத்தியம்? இறவாமலிருக்க வேண்டுமானால் நோய் வரக்கூடாது. நோய் வராமலிருக்க மருந்து தேவை. ஒவ்வொரு விதமான நோயைத் தடுக்கவும் ஒவ்வொரு விதமான மருந்து உண்டு. மரண நோய்க்கு மருந்து...? சிலர் பஸ்பம் சாப்பிட்டார்கள்; சிலர் சூரணம் உட்கொண்டார்கள்; இன்னும் சிலர், தைலங்களையும் எண்ணெய்களையும் பூசிப் பார்த்தார்கள். எல்லா மருந்தும் அப்போதைக்கு ஏதோ சமாதானம் தந்தாற்போல் தெரிகிறதே தவிர, எந்த மருந்தும் மரணத்தைத் தடுத்ததாகத் தெரியவில்லையே! சொல்லப்போனால், மருந்து கொடுத்த மருத்துவர்களும் அழிந்துதான் போனார்கள். இது என்ன புது மருந்து? எந்த மருத்துவர் இதைத் தருவார்?

மருந்து இருக்கிறது; ஆனால், இது புதிய மருந்தில்லை. மிக மிகப் பழைய மருந்துதான். அதுவும், மிகவும் எளிமையான மருந்து. எந்த மருத்துவரும் இந்த மருந்துக்குச் சீட்டெழுதித் தரமாட்டார். வேடிக்கை என்னவென்றால், இந்த மருந்தும், இதன் மருத்துவரும் ஒருவரே! அது என்ன மருந்து?

இந்த மருந்து ஒரு தாமரை. சரி, இதனை எப்போது உட்கொள்ள வேண்டும்? கவலையே வேண்டாம். இந்த மருந்தை உட்கொள்ள வேண்டாம்; வெறுமே பிடித்துக் கொண்டால் போதும். மரணத்திலிருந்து தப்பித்து விடலாம்.

தாமரையைப் பிடித்துக் கொண்டால் மரணத்திலிருந்து தப்பிவிடலாமா? பிடித்துக் கொள்ளும்போது அமுதம் ஏதாவது நமக்குள் பாய்ந்து விடுமா?

பிடித்துக் கொள்ளக்கூட அவசியமில்லை. நினைத்துப் பார்த்தால் போதும். அப்போதே அந்தத் தாமரை மருந்தாக, அமுதமாக வாழ்வு தரும். எந்தத் தாமரை என்று தேடுகிறீர்களா? பட்டினத்தார் அடையாளம் காட்டுகிறார்:

*பிறவாதிருக்க வரம்தரல் வேண்டும்; பிறந்துவிட்டால்*
*இறவாதிருக்க மருந்துண்டு காண், இது எப்படியோ?*
*அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்*
*மறவா திரு மனமே! அது காண் நல் மருந்துனக்கே*

*(பட்டினத்தார் -- திருத்தில்லை பாடல்)*

காலைத் தூக்கி ஆடுகிறாரே, அந்த நடராஜ பெருமானின் திருவடித் தாமரையைப் பற்றிக் கொண்டால் போதும்; இல்லையில்லை, மனத்தில் மறவாது நினைத்தாலே போதும்; மரண நோய்க்கும் மருந்து கிட்டிவிடும்.

(மந்திரம் ஒலிக்கும்...)

வாசகர்களே! உங்களைப் பாதித்த விஷயங்களை 'வாசகர் தலையங்கம்' பகுதியில், பாராட்டலாம்; குட்டலாம்; திட்டலாம்; உடனே எழுதுங்க!

## வாசகர் தலையங்கம்



# வருமான வரித்துறை கவனிக்குமா?

# பொல்லாத போலிகள்!

நுனி நாக்கில் ஆங்கிலமும், டிப்டாப் ஆடையுடனும் இன்று யார் வேண்டுமானாலும் 'நான் இன்கம்டாக்ஸ் ஆபீசர், உங்கள் வீட்டைச் சோதனையிட வேண்டும்' என்று போலி வருமானவரித் துறை அதிகாரிகளாகத் தோன்றி ஏமாற்றுவது தொடர்கதையாகிவிட்டது.

முன்னாள் எம்.எல்.ஏ. ரவிசங்கரே பல ஆண்டுகளாக, போலி வருமானவரி அதிகாரியாக நடித்து, ஏமாந்த வீடுகளிலிருந்து நகை, பணம் என்று அள்ளி கோடிகளைக் குவித்துள்ளார். இவரது நடிப்பில் ஏமாந்து பணத்தையும், நகையையும் இழந்த பலர் இன்னும் போலிசில் புகார் கொடுக்க முன் வரவில்லை.

இந்தப் போலி வருமான வரி அதிகாரிகள் தோன்றுவதைத் தடை செய்வது வருமான வரித்துறை கையில்தான் உள்ளது. முதலில் வருமான வரித்துறை அதிகாரிகள் எந்த மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள், எந்த ஜோனல் அலுவலகத்திலிருந்து வருகிறார்கள் என்பதற்கு ஆதாரம் வைத்திருக்க வேண்டும்.

ஒவ்வொரு மாவட்ட வருமான வரித்துறை அலுவலக ஃபோன் நம்பரை அடிக்கடி பத்திரிகைகளில் வெளியிட்டு, பொதுமக்கள் தங்கள் சந்தேகங்களைக் களைந்து கொள்ள உதவ வேண்டும்.

போலி டாக்டர்கள், போலி மருந்துகள், போலி காவல் துறையினர் என்ற போலி வரிசையில் இப்போது போலி வருமான வரித்துறையினர் என்று நிறைய பேர் உலா வருகின்றனர். வருமான வரித்துறையினர்தான் இந்தப் போலிகளிடம் இருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டும். வருமான வரித்துறை முயற்சிக்குமா?

**- டி.ஜெய்சிங், கோயம்புத்தூர்**

# உண்மையான ஸ்மரணம்!




**வா**யால் 'நாராயண' என்று சொன்னால் அது நாராயண 'வசனம்'தான்; 'ஸ்மரணம்' இல்லை. ஸ்மரணம் என்றால் மனஸால் நினைப்பது, நன்றாக நினைப்பது. வெறுமே வாயால் மட்டும் சொல்லி ப்ரயோஜனமில்லை. மனப்பூர்வமாக நினைத்துச் சொல்லணும். ஆனால் நடைமுறையில் என்ன ஆகிற தென்றால், ஒரு ஸ்தோத்திரம், மந்த்ரம் எது வானாலும் சரி, அடிக்கடி ஒரு 'ரொடீனா'கச் சொல்கிறபோது வார்த்தையை மாத்திரம் சொல்வதாகத்தான் ஆகிவிடுகிறது; அந்த வார்த்தைக்கு என்ன அர்த்தமோ அதை மனஸ் நினைக்காமல், மனஸ் அது பாட்டுக்கு எதெதையோ யோசிப்பதாகவும் வாய் மட்டும் மொண மொண பண்ணுவதாகவும் ஆகி

**வார்த்தைக்கு என்ன அர்த்தமோ அதை மனஸ் நினைக்க வேண்டும்!**

விடுகிறது! அப்படி இங்கேயும் நாராயணனை ஸ்மரிக்காமல் பேரை மாத்திரம் சொன்னால் மஹா தோஷமாகி விடும். மநுஷ்யாளுக்கு மநுஷ்யாள் மிஸப்ரோப்ரியேட் பண்ணுவதே குற்றமென்றால் பகவானுக்கானதை அப்படிப் பண்ணுவது மஹா பெரிய குற்றந்தானே? ஸதா காலமும் ஸர்வ ஜாக்ரதையாக இருந்தா லொழிய, ஒரு ஸந்நியாஸிக்குப் பல பேர் தினந் தினமும் நமஸ்காரம் பண்ணுகிறபோது அவன் 'நாராயண' சொல்வது ஒரு ரொடீனாகி விடுவதில் அவன் இப்படிப்பட்ட அபராதத் துக்கு ஆளாகி விடக்கூடும். அதனால்தான் இந்த விதியை 'ஈஸி' என்று சொல்லாமல், 'ஈஸி மாதிரி இருக்கிற' என்று சொன்னேன்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

## பா.ராஜா

இன்று சனிக்கிழமை. வழக்கமாய் மாதத்தின் இரண்டாம் சனிக்கிழமைகளில் மின்துறையினர் மாதாந்திரப் பராமரிப்புப் பணிகளுக்கென காலை ஒன்பது மணியிலிருந்து, மாலை ஆறு மணிவரை, மின் விநியோகத்தை நிறுத்திவிடுவார்கள். சென்ற வாரம் ஏனோ தெரியவில்லை மின்சாரம் நிறுத் தப்படவில்லை. இன்று இம்மாதத்தின் மூன்றாவது சனிக்கிழமை. காலை ஆறு மணியிலி



13

# ஒரு விடுமுறை தினத்தின் நிகழ்வுகள்!

ருந்தே தறிக்கார இளைஞர்களுக்குள் ஏதோ வொரு இனம்புரியா அவஸ்தையாயிருந்தது. அதை அவஸ்தை என்றுகூட சொல்லிவிட முடியாது, ஓர் எதிர்பார்ப்பு. ஒருவேளை இன்று மின்சாரம் இல்லாவிட்டால், இன் றைய தினத்தை எப்படிக் கழிப்பதென யோச னையில் கரைந்து கொண்டிருக்கிறோம். உறுதியாய்த் தெரிந்தால்தானே யாதொரு முடிவுக்கும் வர இயலும்.

எல்லோரும் மின்சாரம் இன்று இருக்கா தென ஒருவித அலையை உருவாக்கியிருந் தனர். இதுதான் சமயமெனச் சிலர், இன்று நிச்சயமாய் மின்சாரம் இருக்காதெனக் குறுஞ்செய்திகளை அனுப்பிக் கொண்டிருந் தனர். எப்படியும் இன்னும் ஒரு மணி நேரத்தில் தெரிந்துவிடத்தான் போகிறது. இருந்தாலும், எங் கேனும் வெளியே செல்வதற்கு ஏதேனும் திட்டமிட்டால்தானே என, நகம் கடிக்கத் தொடங்கி விட்டனர். வழக்கமாய் மாதாந்திர மின் விடுமுறை தினத்தில், திண் ணைக்குத் திண்ணை சதுரங்க விளையாட்டுக் களைகட்டும். இன்னும் கொஞ்சம்பேர், கிரிக்கெட், சினிமா, நீச்சல் குளம், அண்ணா பூங்கா எனச் சென்று கொண்டிருப்பார்கள். ஒருவன் யோசனை கூறிக்கொண்டிருந்தான். அப் போது பார்த்து அதே குறுஞ்செய்தி என் ஃபோனுக்கும் வந்து சிணுங்கியது.

**த**றி ஓட்டும் இளைஞர்கள், இழை வாங் கும் ஊசியை, மிக ஸ்டைலாகக் காதில் சொருகி வைத்திருப்போம். ஊசியைத் தறியின் பிரேக்குக்குப் பக்கத்திலேயே கூட வைத்துவிட்டு, தேவைப்பட்டால் எடுத்து இழை வாங்கிவிட்டு அங்கேயே வைத்துக்கொள்ளும்படி, வசதி இருக்கிறதுதான். ஆனால் அதெல்லாம் வய தானவர்களின் பழக்கம். நாங்க எந்நேரமும், கர்ணனின் கவச குண்டலத்தைப் போல, ஊசியைக் காதிலேயேதான் சொருகி வைத் திருப்போம். பிறக்கும்போதே ஒன்றும் கர்ண னைப்போல, ஊசியுடன் நாங்கள் பிறந் திருக்கவில்லைதான். ஆனால், பிறந்ததும் எங்களைக் கிடத்தியது தறி குடோனில்தான். ஆனால் தற்போது செல்ஃபோன்களின் பயன்பாடு அதிகமாகி விட்டபின், காதில் ஊசியும், கழுத்தில் கட்டித் தொங்கவிட்டுக் கொண்ட செல்ஃபோன்களுமாய் ஒரு விநோத ஜந்துவாகத்தான் உலவிக் கொண்டி ருக்கிறோம். தார் பெட்டியில் ஃபோனை வைத்துவிட்டோமானால் தறி சத்தத்தில் ஃபோனடிப்பது கேட்கவே கேட்காது. அதிர்வு நிலையில் வைக்கப்பட்டு, கழுத்தில் தொங்கும் செல்ஃபோனில், யாராவது பேசு வதற்கு அழைத்தால், உடலை ஒரு சிலுப்பு சிலுப்பியபடியே வெளியே ஓடுவோம், மற்றவர்களும் புரிந்து கொள்வார்கள். ஃபோன்தான் வந்திருக்கிறது, வேறேதும் விபரீதமாய் நிகழ்ந்துவிடவில்லை என.

அதிலும் இப்போது சைனா ஃபோன்களின் வரவுக்குப் பிறகு, பிட்டுப்படத்துக்குப் பஞ்சமே யில்லை; சரி மின்சாரம் என்ன செய்யுமோவெனத் தெரியவில்லை. இன்னும் சற்று நேரத்தில் தெரிந்து விடப்போகிறது. நாம் ஏன் அலட்டிக்கொள்ள வேண்டு மென, தறியில் கவனமாகி நாலு தார்தான் மாற்றியிருந் தேன். வெளியே ஒரே கூச்சல் குழப்பம். தறிச் சத் தத்தையும் மீறி அந்த இரைச்சல் உள்ளே நுழைந்ததால், தறியை நிறுத்திவிட்டு எட்டிப் பார்த்தேன். நான் பார்ப்பதற்கும் எதிர்வீட்டு ஜெயபாலை இன்னொரு ஆள் அடித்து டிச்சியில் தள்ளிவிடுவதற்கும் சரியா யிருந்தது.

என்ன ஏதுவென விளங்காமல், ஓடிச்சென்று அடித் தவனின் தோள்களைப்பற்றி ஒரு தள்ளுத்தள்ளி அருகிலிருந்த திண்ணையில் அமரவைத்துவிட்டு, ஜெயபாலைத் தூக்கிவிட்டுப் பார்த்தால் அவரது முழங்காலில் ஒரு வெட்டு உண்டாகிக் குருதி கொட் டத் தொடங்கிவிட்டிருந்தது. அருகில் அல்லு பிடிப் பதற்கென தெருவில் நீட்டப்பட்டிருந்த பட்டுப்பாவு கீழே மண் ரோட்டில் விழுந்து கெஜாலாகிவிட்டிருந்தது.

எங்கள் ஏரியா முழுவதும் தறிகளால் நிரப்பப்பட்டி ருக்கும். அதில் அதிகம் விசைத்தறிதான். அப்புறம்தான் கைத்தறி. ஆரம்பத்தில் கைத்தறி நெய்தவர்கள்தான் தற்போது கால வளர்ச்சியில் விசைத்தறிக்கு மாறியிருக் கின்றனர். ஆனாலும் கைத்தறியை முற்றிலுமாய்க் கைவிட யாராலும் முடியவில்லை. அதற்கவர்கள் முன்வரவுமில்லை. பட்டுப்புடைவை, பட்டு வேஷ்டி, காட்டன் வேஷ்டி, துண்டு என, கைத்தறித் துணிகளுக்கென மார்க்கெட்டில் ஒரு கிராக்கி இருந்தது. முன்பு என்ன செய் தார்கள் என்றால், கைத் தறிக்கென ஒதுக்கப்பட்ட ரகங் களை, விசைத்தறியில் போட்டு நெய்து, கைத்தறியில் நெய்ததைப் போலவே, ஒரு சில அடையாளங் களை ஏற்படுத்தி, பேக் செய்து விற்கத்தொடங்கினர். அப்போது கைத்தறிக்காரர்களுக்கு மிகத் துயரமான காலக்கட்டமாயிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாய் விசைத் தறிகள் பெருகத்தொடங்கியதும் அப்போதுதான். ஆனால் காலப் போக்கில் அந்தத் தில்லுமுல்லு, துணியில் புழங்கும் எல்லோருக் கும் தெரியவர, இப்போதெல்லாம் அந்த ஃபிராடு வேலை, அதிகம் இருப்பதாய்த் தெரியவில்லை.

கைத்தறிகளும், விசைத் தறிகளும், சரிவிகிதமாய் கலந் திருக்கும் இப்பகுதியில், கைத் தறிப் பாவினைத் தெருவினில் நீட்டி, தாம்பால் கட்டி, ஒழுங்கு செய்து, ரோலில் சுற்றிக் கொண்டு விட்டால், பிறகு அதை அப்படியே தறியில் நீட்டி நெய்யலாம். இப் படியாக ஒழுங்குபடுத்திக் கொள் வதற்கு அல்லு பிடிப்பதெனப் பெயர்.

ஒரு தெருவில் பக்கம் பக்க மாய் இரண்டு அல்லுகள் பிடிக்க லாம். தெருவின் அகலம் அதற்கே சுகுராகத்தான் இருக்கும், இரண்டு



## வேண்டவே வேண்டாம்!

'திருமதி செல்வம்', 'தங்கம்', 'இளவரசி' போன்ற சீரியல்களில் நடித்து வரும் ஸ்ரீஷாவுக்கு ஏகப்பட்ட வாய்ப்பு கோலிவுட்டிலிருந்து வருகிறதாம். ஆனால், நிஷா ''ஐய்யய்யோ வேண்டாம்பா... எப்படியும் அவங்க கிளாமரா நடிக்க வெச்சி நம்மள காலி பண்ணிடு வாங்க. குடும்பப்பாங்கான டி.வி. சீரியலே எனக்கு போதும்'' என்கிறார். சினிமாவை லைஃபில் ஊறுகாய் மாதிரி தொட்டுக்க லாம். அதுவே சாப்பாடு இல்லை என்கிறாரோ, இந்த வெவரமான பொண்ணு!

- விஜய் கோபால்

அல்லுகளைத் தெருவில் நீட்டி விட்டால், நடப்பதென்பதே சற்று சிரமம்தான். ஜாக்கிரதையாக பாவுமேல் மோதாமல் நடந்து போக வேண்டும், கொஞ்சம் மோதினாலும், அந்த இடத்தில் பாவு தனித்தனி இழையாய் இல்லாமல் கயிறுபோல முறுக் கிக்கொள்ளும். நெய்வது சிரமம். அல்லுக்கு அடியில் புகுந்து அந்தப் பக்கமாய் போகிறார்கள் என அடிக்கடி சண்டை நடக்கும்.

அப்படித்தான், இரண்டு அல்லுகள் நீட்டியிருக்கும்போது, எதிர்வீட்டு ஜெயபால் மிக அவச ரமாய் காலேஜ் படிக்கும் அவரது பெண்ணை பஸ் ஏற்றி விடுவதற் கான பதற்றத்தில் எக்ஸெல் சூப்பரை, ஒரு முறுக்கி முறுக்கி, நடப்பதே சிரமமான தடத்தில் வண்டியைச் செலுத்தியவர், தடு மாறி தாம்பின்மேல் மோதி, அது கீழே விழுந்து, பட்டுப்பாவு அப் படியே முழுவதுமாய் மண் சாலையில் விழுந்ததும், ஆவேசம் வந்தவராய், அல்லு பிடித்துக் கொண்டிருந்த ஒருத்தர், ஜெயபால் மேல் கை வைத்துவிட்டார்.

அவரும் மிகத்திறமையாய் வண்டி ஓட்டுபவர்தான், இடித்து விடாது என்ற கணக்கில்தான் சென்றிருக்கிறார். ஆனால், சாலை வசதி செய்து தருவதற்கென ஆறு மாதத்துக்கு முன்பு, ஜல்லிகளைக் கொண்டுவந்து கொட்டியிருந்தனர் மாநகராட்சி ஆட்கள்.

ஒரு சிறு கறை இருந்தாலும் பட்டு வேஷ்டி வேலைக்காகாது. நெய்தவரிடமே திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். ஜல்லி யால் தடுமாறி பாவில் ஜெயபால் மோதிவிட இப்போது செம்மண்ணில் விழுந்து, கலரிங் செய்து கொள்ளும் இளைஞர்களின் தலையைப் போல, வெள்ளை நிறப் பட்டுப்பாவில் அங்கங்கே மண்ணின் நிறம் படிந்து விட்டதில் கோபமடைந்தவர்கள், அவ ரைத் தாக்கியது போக, வண்டியையும் பிடுங்கி வைத் துக்கொண்டனர்.

மணி மிகச்சரியாய் ஒன்பது ஆனதும், மின் விநி யோகம் நிறுத்தப்பட்டுவிட்டதில் தறிச்சத்தங்கள் அனைத்தும் செத்துப் போனதில், நிசப்தமாயிருந்த ஊரை இந்தச் சண்டைச்சத்தம் நிரப்பிக் கொண்டிருந்தது. அடுத்தடுத்த தெருக்காரர்களும், கூடி நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கிவிட்டனர்.

சண்டை மிக வலுவடைந்து பிறகு, கறையாகிச் சிக்கலான பாவுக்கென நஷ்டஈடாய் இரண்டாயிரம் ரூபாய் தருவதாகப் பஞ்சாயத்தான பின்புதான் பாவுக் காரர் சாந்தமடைந்தார். வண்டியையும் திருப்பிக் கொடுத்துவிட்டவரின் முகத்தில் மெல்ல மெல்ல சிறு புன்னகையொன்று வந்தமர்ந்திருந்தது. தொழில் செய்யும் பாவை நாசப்படுத்திவிட்டார்கள் என்ற ஆவேசமெல்லாம் தீர்ந்துபோனவராய், கைக்கு வந்து விட்ட பணத்துக்காய் சிரித்துக்கொண்டிருந்தவரைப் பார்ப்பதற்கே விநோதமாக இருந்தது. கையில் பண மிருந்தால் எதையும் செய்துவிட்டு சமாளிக்கலாம் அல்லது தப்பிக்கலாம் என்ற மனோபாவம், ஜெயபால் போன்றோரின் மனத்தில் முளைவிடுவதற்கு இவர் போன்ற ஆட்கள்தான் காரணம் எனவும் தோன்றியது.

''உங்க பையன் எதிர்காலத்தில் பெரிய மந்திரி ஆயிடுவான்!''

''எப்படிச் சொல்றீங்க சார்?''

''தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டியது நம் முதல்வர்னு சொல்றானே!''

- ஞா. ஞானமுத்து



**கூ**ட்டம் கொஞ்சம் கொஞ்சமாய் உதிரியாகி கலையத் தொடங்கியது. காலை உணவுக்கான நேரமாக அது இருந்ததும் ஒரு காரணம். கலையத் தொடங்கியவர்களின் ஒருவித முணுமுணுப்பு என்னைக் கொஞ்சம் உத்வேகப்படுத்தியது. அது என்னவென்றால், குவித்து வைக்கப்பட்ட ஜல்லிகளும், நிரப்பி வைக்கப்பட்டிருக்கும் தார் பேரல்களும் இந்த இடத்தில் இல்லையென்றால், இவ்வளவு பிரச்னையே வந்திருக்காது. அந்தாளுக்கு அடியும், கீழே விழுந்ததில் காயமும், ரெண்டாயிரம் பணத் தண்டமும் ஏற்பட்டிருக்காது என்பதுதான்.

தெருவின் முடிவில் ஓடையைத் தாண்டியிருக்கும் தென்னந்தோப்பருகில், இருக்கும் காலி இடத்தில் இந்தத் தார் பேரல்களைக் கொண்டுபோய் வைத்துவிட்டால் என்னவெனத் தோன்றியதும், ஒன்றிருவரிடம் கூறியபோது சிலர் மலைத்தாலும், இளவட்டங்கள் ஓரளவுக்கு ஆதரவளிப்பதாய்த் தோன்றியதும், அங்கிருந்த பேரல்களைச் சிரமப்பட்டு, காய்ந்த ஓடையைத் தாண்டி இடம்பெயர்க்கும் முயற்சியில் மதியம் வந்துவிட்டிருந்தது.

எல்லோரது முகங்களிலும் ஒருவித பெருமிதம், எப்படி இத்தனை பேரும் ஒன்றாய் இசைந்தோம், இயங்கினோம் என, கேள்வியாகவே இருந்தது எனக்கு. ஒரு வழியாய் கஷ்டப்பட்டு பேரல்களை யாருக்கும் தொந்தரவில்லாத ஓர் இடத்தில் வைத்தாயிற்று. இனி மிச்சமிருக்கும் அரை நேர விடுப்பை என்ன செய்வதென யோசித்தவாறே அவரவர் இல்லங்களுக்கு மதிய சப்பாட்டுக்குச் சென்றோம்.

**"உழைப்பாளர் சிலை திடுமென உயிர்பெற்று இயங்குவது போலிருந்தது என அம்மா சொன்னா."**



**சா**ப்பிட்டு முடிப்பதற்குள்ளாகவே, வியர்வையில் உடல் தொப்பலாய் நனைந்துவிட்டிருந்தது. காலண்டர் அட்டையை எடுத்து விசிறியபடி சுவரில் சாய்ந்தமர்ந்தபோதுதான், அந்த விநோதமான ஒலி செவிப் பறையை அறைந்தது.

என்ன ஒலியென அனுமானிக்க முடியவில்லை. குழந்தை அழுவது போலவும் இருந்தது. இப்போது தான் பைக் ஹாரன்களில் பன்றி உறுமுவதைப்போலவும், செல்ஃபோன்களில் நாராச சத்தங்களை வைத்துக்கொண்டு பிறரின் கவனத்தை ஈர்க்க விரும்புகின்றோமே. அதுபோல் ஏதாவது இருக்குமாவென்ற யோசனையில் கரைந்துகொண்டிருந்தன நொடிகள். நொடிமுள் துடிப்பதின் சிறு அதிர்வொலி, அவ்விநோத ஒலிக்கிடையிலும் தனதிருப்பைக் காட்டிக் கொண்டிருக்கிறது. சுவரில் சாய்ந்தபடி அமர்ந்திருந்ததால் நொடிமுள்ளின் ஒலி, என் இதயம் துடிப்பதான ஒலியாகவும், இதய ஒலி கடிகாரத்தின் ஒலியாகவும் மாறி மாறி, சப்தமிட்டு விளையாடுவதாய்த் தோன்றியது எனக்கு.

கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள்தான் வந்து சொன்னார்கள். தார் நிரப்பப்பட்டிருந்த பேரலில் ஆடு ஒன்று மாட்டிக் கொண்டதென. போய் பார்த்தால்...

ஒரு திரைப்படத்தில் புதைகுழியில் அமலா சிக்கிக் கொண்டதுபோல, வெள்ளை வெளேரென இருந்த அந்த ஆடு சிக்கிக்கொண்டு இருந்தது. வெளியே வருவதற்

கெனக் கால்களை அசைத்ததில் மேலும் உள்ளே சென்று, சிக்கிக் கொண்டு உயிர்நோகக் கத்திக் கொண்டிருக்கிறது.

சிக்கிக்கொண்ட ஆடு மட்டும் கத்தோ கத்தோவெனக் கத்திக் கொண்டேயிருக்கிறது. பொதுவாக எங்களுக்குச் சத்தம் குறித்தெல்லாம் அச்சமேயில்லை. பொழுதுக்கும் தறிச் சத்தத்திலேயே புழங்கிக்கிடக்கும் எங்களது செவிப்பறைக்குப் பல்லாயிரக்கணக்கான டெசிபல் சத்தம் கூட வெறும் எறும்புக் கடிதான். ஆனால் அந்த ஆடு அலறும் சத்தம் எங்களை வதைக்கத் தொடங்கிவிட்டிருந்தது. அதற்குள் ஆட்டின் உரிமையாளர்களும் தோப்புக்கு வந்து சேர்ந்துவிட்டார்கள்.

தார் பேரல்களை இங்கு கொண்டுவந்து வைத்ததற்குக் கடிந்து கொண்டனர். அதை விடுவிக்க என்ன செய்வதென ஏதும் புரியவில்லை. அதற்குள் ஒருவன் பேரல்மீது ஏறி, தாரில் கால் படாதவாறு நுனியில் இரண்டு கால்களையும் அகற்றி வைத்தபடி, நின்று கொண்டு, ஆட்டின் தாடையைப் பற்றித் தூக்க முனைந்தான். முடியவில்லை. மீண்டும் பலம் கொண்ட மட்டும் தூக்கினான். அதன் அலறல் இப்போது இன்னும் அதிகமாகிவிட்டிருந்தது. அதன் கண்களில் ஒருவித பயம் சூழத்தொடங்கியிருந்தது.

அதற்குள் சிலர், சிறியதொரு தகர டப்பாவைக் கொண்டு தாரை அள்ளி வேறொரு பக்கெட்டில் கொட்டிக்கொண்டிருந்தனர். ஒவ்வொருவராக பேரலில் ஏறி




''ஏன்டா ரெண்டு நாள் இருந்துட்டு போகலாம் தானே.''

''அடப்பாவி பஸ் நகரும்போது சொல்றீயேடா.''

-பி.பாலாஜி

கணேஷ்

நின்று, அதன் தாடையையும் கழுத்தையும் பற்றித் தூக்கோ தூக்கெனத் தூக்கி, மில்லிமீட்டர் மில்லிமீட்டராய் அதை மேலெழுப்ப, டப்பாவால் தாரை பக்கெட்டுக்கு மாற்றுபவர்கள் ஒருபக்கம் அள்ளியள்ளி மாற்றிக் கொண்டிருக்க, கடைசியில் லோகநாதன் மேலே ஏறி இழுத்துத் தூக்கியதும், தார் தனியாகவும், ஆடு தனியாகவும் வந்திருந்தது. கையிலிருந்த ஆட்டை, அவன் கீழே விட்டதும், அங்கிருந்து பொழச்சோம்டா சாமி எனத் தலைதெறிக்க ஓடி எங்கேயோ ஒளிந்து கொண்டது.

வானம் ஓரளவு இருட்டத் தொடங்கிவிட்டிருந்தது. இன்றைய விடுப்பு எதிர்பாராதவிதமாய் இப்படியாகக் கழிந்ததில் கொஞ்சம் சலிப்பு இருந்தாலும், மிகவும் ஆயாசமாகவும் மன நிறைவாகவும் இருந்தது. ஆட்டை விடுவிக்க பேரல் மீதேறி நாங்கள் மல்லுக்கட்டியது, உழைப்பாளர் சிலை திடுமென உயிர்பெற்று இயங்குவது போலிருந்தது என அம்மா சொன்னாள். அவருக்கெப்படி இந்தச் சிந்தனை வந்திருக்குமென்றால், மே ஒன்றுதான் அவர்களின் பிறந்த தினம்.

மறுநாள் காலை வழக்கமான நேரத்தைவிட கொஞ்சம் தாமதமாகிவிட்டிருந்தது தறிக்குச் செல்ல. அதனால் எப்போதும் போல் ரோட்டைச் சுற்றிக் கொண்டு செல்லாமல், பக்கத்துத் தெரு வழியாய் போய்விடலாம் என, விறுவிறுவென்ற நடையுடன் சென்றபோதுதான் அந்த அதிர்ச்சியையும் துயரத்தையும் எதிர்கொள்ள நேர்ந்தது. அண்ணாமலை மட்டன் ஸ்டாலின் முற்றத்தில், தார்படிந்த அந்த ஆட்டின் நான்கு கால்களையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டிக்கொண்டிருந்தான் ஒருவன். ●

**வாசகர்களே!**
**திருமண ஃபோட்டோ மட்டுமல்ல, நீங்கள் பெரிதும் ரசிக்கும், பொக்கிஷமாகப் பாதுகாக்கும் ஃபோட்டோ எதுவாயினும் 10 வரிகள் குறிப்புடன் 'ஜம்'முன்னு எழுதி அனுப்புங்க...**

என் கோ சிஸ்டர் நர்சரி பள்ளியில் தலைமை ஆசிரியையாக இருந்தார். பள்ளிச் சுற்றுலாவுக்கு அவருடன் 'கோல்டன் பீச்' சென்றபோது இருவரும் சேர்ந்து புகைப்படம் எடுத்துக்கொள்ள விரும்பினோம். ஆனால் சக ஆசிரியைகள், 'சேர்ந்து நின்று படம் எடுத்தால் பிரிந்து விடுவீர்கள்' என்றனர். எங்களுக்கு இதில் நம்பிக்கை இல்லை. இருந்தாலும் அவர்கள் பேச்சுக்கு மதிப்பு கொடுத்து, சிலைக்குப் பின் சக ஆசிரியை ஒருவரை நிற்க வைத்து சிலையின் இரு புறத்திலும் நாங்கள் அமர 'க்ளிக்'செய்த புகைப்படம் இது. சுமார் 20 வருடங்களுக்கு முன்பு எடுத்த புகைப்படம். இன்றும் நாங்கள் ஒன்றாகத்தான் வாழ்ந்து வருகிறோம். இடது புறம் நானும் வலது புறம் என் கோ சிஸ்டரும் உள்ள புகைப்படம் எங்களுக்குப் 'பொக்கிஷம்'தான்

**- எஸ்.விஜயலக்ஷ்மி, ஆதம்பாக்கம்**



பிறக்கப் போவது கண்ணனா அல்லது ராதையா என்று மருத்துவமனையில் எதிர்பார்த்துக் காத்திருந்தபோது, 'வரகூர் பெருமாள்' கருணையால் 'ராதையும் ஆண்டாளும்' என்று இரட்டையரை மடியில் போட்டு, மூத்தப் பிள்ளை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியபோது எடுத்த படம். பேத்திகளுடன் என் கணவரும் மகனும். இந்தப் படம் எங்கவீட்டு ஆல்பத்தில் விசேஷமான புகைப்படம்.

**- கே.கீதா,**
**வரகூர் பெருமாள் திருமாளிகை, ஸ்ரீரங்கம்**



# ஆறா ஆல்பம்

தமிழகத்தில் மதுரை பல வரலாற்றுச் சுவடுகளைச் சுமந்து நிற்கும் மண். நடுங்கும் ஓர் படுகொலையை அன்றைய மத்திய அமைச்சரின் ஆணையை ஏற்று, கதை முடிக்க எதிர்க்கட்சி முயன்றது. இந்த முயற்சியை முனை மழுங்கச் செய்தவர் பெருந் தலைவர் காமராஜரால் மாவீரன் என்று பாராட்டப்பட்ட ஐயா பழ.நெடுமாறன். மதுரை சுற்றுப் பயணத்தை முடித்து, சென்னை செல்ல மதுரை தொடர்வண்டி நிலையத்தில் வைத்து பல நூறு தொண்டர்கள் மத்தியில் அன்று அன்னை இந்திரா பகிர்ந்த வார்த்தைகள் இந்தப் புகைப்படத்தைப் பார்க்கும் போதெல்லாம் நினைவுக்கு வரும். அந்தச் சொற்றொடர் 'My Son Nedumaran save my life.' அந்த நிகழ்வு நடந்த சூழலில் அன்னை இந்திராவோடு எடுத்துக் கொண்ட புகைப் படம். இது என் நினைவின் நிழல் படமாய் என்றென்றைக்கும்.

- த.இ.தாகூர், கன்னியாகுமரி

சினிமா குடும்பத்தின் வாரிசுகள் மட்டுமே சினிமாவில் ஜொலிக்க முடியும் என்பதை உடைத்து, சாதாரண பாத்திர வியாபாரியின் மகனான ஏ.ஆர்.முருகதாஸ், ஜொலிக்கும் கதாபாத்திரங்களைப் படைத்து கோலிவுட்டில் கோலாகலமாய் கோலோச்சு கிறார். அவருடனான இப்படம் என் தன்னம் பிக்கையை இன்னும் இன்னும் வளர்த்த படியே இருக்கிறது. இது படமல்ல; உரம்.

- ஈ.ராஜா,
கள்ளக்குறிச்சி

ஃபோட்டோவுடன் இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/-

# 14.11.2010 முதல் 20.11.2010 வரை

## தஞ்சை பரத்வாஜ்

### மேஷம்

கடல் கடந்து செல்லும் யோகம் வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். கடன் தொல்லை இருக்காது. புதிய வீடு/மனை வாங்க நேரிடும். குடும்பத்தில் சுபச் செலவு ஏற்படும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு ஏற்படும். சிலருக்குப் பதவி மாற்றம் ஏற்படும். புண்ணிய ஸ்தலங்கள் செல்ல நேரிடும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும்.

### ரிஷபம்

மன சஞ்சலம் தீரும். உடல் ஆரோக்கியம் சீராகும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும். கணவன் - மனைவிக்குள் இருந்து வந்த பிரச்னைகள் தீரும். வேலைப் பளு குறையும். வியாபாரத்தில் கணிசமான முன்னேற்றம் ஏற்படும். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார் ஆக இருப்பது நல்லது. ராகு/கேது/குருவை வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

### மிதுனம்

வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். வீடு மாற்றம் செய்ய வேண்டி இருக்கும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சொத்து, வாகனம் வாங்கும் யோகம் கிட்டும். மனத்தில் இருந்து வந்த பயம் விலகும். சிலருக்குப் புதிய வேலைவாய்ப்பு தேடி வரும். சனி/ராகு/கேதுவை வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

### கடகம்

கல்வி வளம் மேலோங்கும். பண வசதி பெருகும். உடல்நிலையில் இருந்து வந்த தொல்லைகள் விலகும். சிலருக்குப் பதவி உயர்வு உண்டாகும். பொருளாதாரச் சிக்கல் விலகும். மன அமைதி கிட்டும். மனை வாங்கும் யோகம் வந்து சேரும். சத்ரு தொல்லை நீங்கும். குழந்தைகள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். திடீர் பிரயாணம் வந்து சேரும். குருவை வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

### சிம்மம்

பணம் பல வழிகளில் வந்து சேரும். நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். உல்லாசப் பிரயாணம் செல்ல நேரிடும். வீடு/மனை வாங்க சிறந்த தருணம். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். மனக் கிலேசம் விலகும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். ராகு/கேதுவை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

### கன்னி

சற்று முன்னேற்றமான வாரம். மன உளைச்சல் தீரும். உடல் நிலை சீராகும். புதிய வேலைக்கு முயற்சி செய்தவர்களுக்குப் புதிய வேலை கிடைக்கும். உறவினர்களால் இருந்து வந்த பிரச்னைகள் சரியாகும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். கொடுக்கல் வாங்கலில் இருந்து வந்த சிரமம் விலகும். ராகு/கேது/குரு/சனியை வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**துலாம்** **பூ**மி மூலம் ஆதாயம் கிட்டும். கடல் கடந்து செல்லும் யோகம் வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்களின் தரிசனம் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு தேடி வரும். மன நிம்மதி ஏற்படும். தடைகள் விலகித் திருமணம் கைகூடும். சனி பகவானை வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

**விருச்சிகம்** **எ**திலும் கவனமுடன் செயல்பட வேண்டிய நேரம். கூடிய மட்டும் அடுத்தவர் பிரச்னைகளில் தலையிட வேண்டாம். கூட்டாளிகளிடம் அளவாக பேச்சுவார்த்தை வைத்துக் கொள்வது நல்லது. வாகனங்களில் போகும்போது உஷார். கொடுக்கல் வாங்கலில் உஷாராக இருப்பது நல்லது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தடைகள் விலகித் திருமணம் கைகூடும். ராகு/கேது/குருவை வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**தனுசு** **மி**கவும் சிறப்பான வாரம். பத்திரிகைகளில் பெயர் வரும். கடன் தொல்லை தீரும். எதிரிகள் சரண் அடைவார்கள். புதிய வீடு/மனை வாங்க சிறந்த தருணம். வழக்கு முடிவுக்கு வரும். இல்லற வாழ்வில் இருந்து வந்த மனக்கசப்பு விலகும். சிலருக்குப் புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். வீடு மாற்றம் உண்டாகும். சனி பகவானுக்குத் தீபம் ஏற்றிவர நற்பலன் பெருகும்.

**மகரம்** **செ**லவுகள் கட்டுக் கடங்கி இருக்கும். சுப காரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். பணப் பிரச்னை இருக்காது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தொலை தூர மனிதர்களால் நற்செய்தி தேடி வரும். சத்ரு தொல்லை விலகும். உறவினர் வருகையால் மன சந்தோஷம் கிட்டும். செல்வந்தர்களால் நற்பலன் கிட்டும்.

**கும்பம்** **கூ**ட்டாளிகள் விட்டு விலகிச் செல்ல நேரிடும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கடன் சுமை அதிகரிக்கும். நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்து வந்த வழக்கு முடிவுக்கு வரும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். சுய சொத்து வாங்குவீர்கள். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். ராகு/கேது/சனியை வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**மீனம்** **வீ**டு மாற்றம் ஏற்படும். சிலருக்குப் புதிய பணி தேடி வரும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். வராத நிலுவைகள் வந்து சேரும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு/கேது/சனியை வழிபட்டு வர சிரமங்கள் விலகும். நற்பலன் உண்டாகும்.





''எனக்கு ஒரு கஷ்டம்னா, என் மனைவியை நினைச்சுக்குவேன்!''

''ஆறுதலா இருக்குமா?''

''ஆமா! அவளைவிட, இந்தக் கஷ்டமே தேவலைன்னு ஆறுதலா இருக்கும்!''

- ப.உமா மகேஸ்வரி



''தலைவர் இன்னிக்குப் புதுசா ஒரு சாதனை செஞ்சிருக்கார்!''

''என்ன?''

''ஒரே நாளில் மூணு சினிமாவோட பிரிவியூ பார்த்திருக்கார்!''

- லீலாஜி

# எப்படி முடிக்கிறதுன்னு தெரியல!

''எவ்வளவு நேரம்தான் ஆபரேஷன் பண்ணுவீங்க டாக்டர்?''

''ஏதோ ஒரு வேகத்தில் ஆரம்பிச்சுட்டேன். எப்படி முடிக்கிறதுன்னு தெரியலை சிஸ்டர்!''

- ஞா.ஞானமுத்து





''சார், உங்க பையன் அரசியலுக்கு வருவான் போல''

''அப்படியா?''

''பாருங்களேன்; 'தாவர இனத்'தை 'தாவுற இனம்'னு எழுதியிருக்கான்!''

- அனன்யா



''என்னை ஏன் அடிக்கிறீங்க சாமீ?''

''அடப்பாவமே! நீ ஒரிஜினல் இராப் பிச்சையா? மாறுவேடத்தில் மன்னர்னு நினைச்சி அடிச்சுட்டோம்பா!''

- லீலாஜி

''தலைவரே, உங்களை ஐரோப்பிய பல்கலைக் கழகத்தில் பேசக் கூப்பிட்டிருக்காங்க?''

''என்ன தலைப்புல?''

''ஆதாரம் தடயம் வைக்காமல் ஊழல் செய்வது எப்படி?'ங்கற தலைப்பில.

- என்.வி. ரமணி

"அவள் அப்படி ஒன்றும்
அழகில்லை
அவளுக்கு யாரும் இணையில்லை
அவள் அப்படி ஒன்றும் கலரில்லை
ஆனால் அது ஒரு குறையில்லை
அவள் பெரிதாய் ஒன்றும் படிக்கவில்லை
அவளைப் படித்தேன் இன்னும்
முடிக்கவில்லை
அவள் உடுத்தும் உடைகள் பிடிக்கவில்லை
இருந்தும் கவனிக்க மறக்கவில்லை'' என்ற பாடலே என் நெஞ்சில் நிலைக்கும் பாடல். ஏனென்றால் கவிதை, பாடல் என்றாலே பெண்ணை ஆகாயத்தை விட நீலமானவள், வானவில்லை விட அழகானவள், மழை போன்றவள், நிலவு போன்றவள் என்று இல்லாத பொருளை உவமைப் படுத்தி எழுதுவர். அதனாலேயே 'கவிதைக்குப் பொய் அழகு' என்பர். இந்த விதமான பாடலுக்கு மத்தியில் நான் மேற்குறிப்பிட்ட திரைப்படப் பாடல் எதார்த்த உண்மையை அழகாய் விரித்துரைக்கிறது. எல்லாப் பெண்களும் பேரழகி அல்லர். நம் எண்ணமே அவர்களை உயர்த்திப் பார்க்கிறது. இந்தப் பாடல் ஒரு நடுத்தரப் பெண்ணின் பண்பினை அழகாக வெளிப்படுத்தியுள்ளதால் இந்தப் பாடலே என்னைக் கவர்ந்த பாடல்.

- ஹாஜா, காயல்பட்டினம்



இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் ரூ.50 சன்மானம் உண்டு!

சூரிய காந்தி திரைப்படத்தில் ஒலிக்கும் ஒரு வாழ்க்கைத் தத்துவப் பாடல்,

''பரமசிவன் கழுத்திலிருந்து பாம்பு கேட்டது
கருடா சௌக்கியமா...
யாரும் இருக்கும் இடத்தில் இருந்துகொண்டால்
எல்லாம் சௌக்கியமே...
கருடன் சொன்னது... அதில் அர்த்தம் உள்ளது...''



இந்தப் பாடலைக் கேட்கும் போதெல்லாம் நமக்கு எந்த இடத்தில் எவ்வளவு மரியாதை என்பதைப் புரிந்து கொண்டு நடக்க வேண்டும். நாம் ஒருவருக்கு அறிவுரை சொல்லும் முன்பு, நமக்கு அறிவுரை சொல்லும் தகுதி உண்டா என்பதை அறிந்து கொண்டு நடக்க வேண்டும். நாம் இருக்கும் நிலைமை மாறுபட்டால் என்ன மரியாதை கிடைக்கும் என்பதை மனத்தினுள் எண்ணிப்பார்த்து நடக்க வேண்டும் என்பதையெல்லாம் சுய பரிசோதனை செய்து கொள்ளும் அளவுக்கு அழகான அருமையான வாழ்க்கையின் உண்மைகளைப் பிரதிபலிக்கும் கருத்தான வரிகளைப் போட்டு நம்மைத் தெளிய வைத்துள்ளார் கவிஞர்.



''மதியாதார் தலைவாசல் மிதிக்காதே என்று
மானமுள்ள மனிதனுக்கு அவ்வை சொன்னது
அது அவ்வை சொன்னது... அதில் அர்த்தம் உள்ளது''

என்ற வரிகள் வரும்போது எங்கள் வீட்டு டி.வி. ரேடியோ என எதில் ஒலித்தாலும் நான் ஒலி அளவை சற்று அதிகமாக வைத்துக் கேட்பேன்.

- ஆ.கலைமலர், சேலம்

வாசகர்களே!
உங்களுக்குப் பிடித்தமான பாடல் எவையென்று...
10 வரி சுவையுடன் எங்களுக்கு எழுதி அனுப்புங்க...
kalki@kalkiweekly - க்கும் அனுப்புங்க.

"அம்மா என்றழைக்காத உயிரில்லையே, அம்மாவை வணங்காது உயர்வில்லையே'' என்ற பாடல் என்னை மிகவும் கவர்ந்த பாடல். அனைத்து ஜீவராசிகளின் பிறப்பிடம் தாய்தான். அந்தத் தாய்மையை ''பசுதங்கம், புதுவெள்ளி, மாணிக்கம், மணி வைரம் அவையாவும் ஒரு தாய்க்கு ஈடாகுமா'' என உன்னத நிலைக்கு கவிஞர் உயர்ந்துள்ளார். அன்னையின் அன்புக்கு இணையும், விலையும் கிடையாது என்பது மறுக்க இயலாத உண்மை. அப்பாடலில் வரும் ''ஈரைந்து மாதங்கள் கருவோடு எனைத் தாங்கி நீ பட்ட பெரும்பாடு அறிவேன் அம்மா, ஈரேழு ஜென்மங்கள் எடுத்தாலும் உழைத்தாலும் உனக்கிங்கு நான் பட்ட கடன் தீருமா'' என்ற வரிகளை எப்போது கேட்டாலும் எனது கண்களில் கண்ணீர்த் துளிகள் வரும். இந்த வரிகளின் உண்மையை ஒவ்வொரு மனிதரும் உணர்ந்தால் நிச்சயம் எடுக்கலாம் முதியோர் இல்லங்களுக்கு மூடு விழா. சிந்திப்பார்களா?

- நிவேதிதா ராமலிங்கம்,
வேளச்சேரி

## எனக்குப் பிடித்த பாடல்!

# படித்தேன்... இன்னும் முடிக்கவில்லை!

கவிஞர் வாலி! மூன்று தலைமுறை கண்ட திறமைசாலி! ''பொடி வைத்துப் பேசுகிறார்'' என்று சொல்வோம் இல்லையா? அதேபோல், பொடி வைத்து எழுதுவதில் இவரை மிஞ்ச எவரும் இல்லை! ''கல்லை மட்டும் கண்டால் கடவுள் தெரியாது'' என்ற தசாவதாரப் பாடலை உன்னிப் பாய் கவனித்தால் வாலி அவர்களின் வானளாவிய திறமை தேன்மாரி பொழியும்!

''ராஜனுக்கு ராஜன் இந்த ரங்கராஜன்தான்! என்று அந்தப் பாடலின் இடையில் வரும் வரியைக் கொஞ்சம் கவனித்துப் பாருங்களேன்! 'எத்தனை கவிஞர்கள் வந்தாலும் நானே எல்லாக் கவிஞர்களுக்கும் தலைவன்!' என்ற மற்றொரு அர்த்தமும் அதில் புதைந்து (ஒளிந்து) இருப்பது தெரியும். எப்படி? வாலியின் இயற்பெயர் ரங்கராஜன்! இந்த ஒரு காரணத்துக்காகவே இந்தப் பாடல் என்னை ஈர்த்துக் கொண்டு விட்டது!

- சு.சினேகா, திருவள்ளூர்




இனிமை நிறைந்த பிரபந்தப் பாசுரங்களுக்கு எளிய உரை எழுதியவர் **டாக்டர் இரா.வ. கமலக்கண்ணன்**. தமிழாசிரியராகப் பணியாற்றியவர், தமிழ்ப் பல்கலைக்கழகம் தொகுத்த பேரகராதிக்கு, முதலாழ்வார் பாசுரங்களுக்கு சொல்லடைவு அமைத்துக் கொடுத்துள்ளார். திருப்பதி தேவஸ்தான மாத இதழான 'சப்தகிரி'யில் இவரது வைஷ்ணவம் பற்றியக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். இவர் படைத்த 'உலகப்பெருங்கவிஞர் கம்பர்' என்னும் நூல் தமிழக அரசின் முதற்பரிசைப் பெற்றது.

நூலாசிரியர், உரையாசிரியர், கட்டுரையாளர், தொகுப்பாசிரியர், சொற்பொழிவாளர் என, தான் ஈடுபடும் அனைத்துப் பணிகளிலும் வைஷ்ணவ உலகிற்கு, சிறப்பாக இன்றும் தொண்டு செய்துவருகின்றார்.

எமது இ
எ
தனி
விரி

இதி
அவ
வரலா
நெறி
நோன்
சூத்
அமை
உ
தை

**முன்பதிவு செய்யத் தொடர்பு கொள்க :**

✆ :99418 63542 / 90949 63125 / 93806 30192
2814 0347 / 2814 4995 / 2434 5582 / 4350 2995

இ-மெயில் : vartha@aol.in

**26.11.2010** தேதிக்குள் பதிவு செய்வோர்க்கு மட்டுமே இந்நூல்கள் கிடைக்கும்!

**முன்பதிவிற்கு முகவரி மட்டும் போதும்! முன்பணம் அவசியமில்லை!!**

சலு
சலு
தபால்
முற்றிலும்

# திவ்யப் பிரபந்தம்

ார்கள் அருளிய 24 நூல்கள்

❖ 4 தொகுதிகள்

ல்கள் எதிர்ப்பக்கம் தெளிவுரை

(15 செ.மீ. x 22 செ.மீ.)

ன் பதம் பிரித்துத் தரப்பட்டுள்ளன!!

விலை ரூ.1200

அருட்செல்வர்

டாக்டர் நா.மகாலிங்கம்

அவர்களின் ஆதரவுடன்

சலுகை விலையில்

ரூ.695

திப்பில், உரையாசிரியர் ா முன்னுரையானது கருதத்தக்க வகையில் மைக்கப் பெற்றுள்ளது.

ந்தத்தின் சிறப்புக்கள்; ருளிய ஆழ்வார்களின் ள் செயல்கள்; வைணவ தர் பெருமை; பாவை பாய் மொழியும் பிரம்ம திவ்யப் பிரபந்தத்தில் பழமொழிகள்; இசை; r போன்ற பல்வேறு யில் அரிய செய்திகள் பெற்றுள்ளன.

இலவசம்

## அஷ்டப் பிரபந்தம்

மூலமும் உரையும் 2 தொகுதிகளில்
1030 பக்கங்கள் (12 செ.மீ. x 18 செ.மீ.)
விலை ரூ. 500

அழகிய மணவாளதாசர் எனப்போற்றப் பெறும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய எட்டு நூல்களின் தொகுப்புதான் 'அஷ்டப் பிரபந்தம்'.

இந்நூலில் 'நாலாயிர திவ்யப் பிரபந்த'த்தின் பொருள் சிறப்பும், ஸ்ரீ நாதமுனிகள் உள்ளிட்ட குரு பரம்பரையைச் சார்ந்த வைஷ்ணவப் பெருமக்களின் அருள்செயல்கள் ஆங்காங்கே அமைந்திருப்பது கற்பவர்களுக்கு மிகுந்த மகிழ்வை விளைவிப்பதாகும்.

நூல் வேண்டுவோர், முன்பதிவு செய்க. பதிவு செய்வோர் அனைவருக்கும் டிசம்பர் மாதம் 10ஆம் தேதியிலிருந்து நாலாயிர திவ்யப் பிரபந்தம் 4 தொகுதிகள் மற்றும் அஷ்டப்பிரபந்தம் 2 தொகுதிகள், ஆக 6 தொகுதிகளும் ஒரே பார்சலில் வி.பி.பி.யில் அனுப்பப்பெறும். தபால்காரரிடம் ரூ. 695 மட்டும் செலுத்திப் பெற்றுக்கொள்ளவும்.

**வர்த்தமானன் பதிப்பகம்**
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர், சென்னை - 17.

கர்நாடக மாநிலம் ஷிமோகா மாவட்டத்தில் சந்தோஷமாகப் பரந்து விரிந்து துள்ளலோட்டம் போடுகிறது துங்க பத்ரா என்ற இரட்டை நதியின் துங்கா. அதன் கரையில் அமைந்திருக்கிறது மத்தூர்.

காலையில் ஆறு மணிக்கு மத்தூரின் அனைத்து வீட்டு வாசல்களிலும் பெண்கள் தண்ணீர் தெளித்து, கோலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். தெரு ஓரத்தில் ஆங்காங்கே பசு மாடுகள் படுத்து, நின்று, நடந்து கொண்டு இருந்தன. இதிலென்ன அதிசயம் என்கிறீர்களா? இந்தக் கிராமத்தில் பேச்சு மொழியே சம்ஸ்கிருதம்தான்.



எப்படி சம்ஸ்கிருதத்துக்கு இப்படி ஒரு முக்கியத்துவம் கிடைத்தது? ''தொன்றுதொட்டே இந்தக் கிராமத்தில் சம்ஸ்கிருதம் பேசும் வேத பண்டிதர்கள் அதிக எண்ணிக்கையில் வசித்து வந்தபோதிலும், இந்தக் கிராமத்தினை முழுமையான சம்ஸ்கிருதம் பேசுகிற அளவுக்கு மாற்ற வேண்டும் என்று பிள்ளையார் சுழி போட்டவர் உடுப்பி பெஜாவர் மடத்தின் பீடாதிபதிதான்'' என்று கூறுகிறார், சம்ஸ்கிருத பாரதி என்ற அமைப்பின் மத்தூர் கிளை அமைப்பாளர் ஸ்ரீநிதி. இவர், பக்கத்து நகரமான ஷிமோகாவில் உள்ள கல்லூரியில் காமர்ஸ் துறை பேராசிரியர்.

''1981ல் பெங்களூருவில்

**கட்டுரை, படங்கள்**

**சந்திரமௌலி**

உரையில், 'ஏசகா கிராமக சம்ஸ்கிருத கிராமக' (சம்ஸ்கிருதம் பேசும் முழுமையான கிராம மாக) என்று குறிப் பிட்டார். அவரது ஆசி யுரை அளித்த உத் வேகத்தில் மத்தூர் கிராமத்து மக்கள் அனைவருக்கும் சம்ஸ் கிருதம் சொல்லிக்

# சம்ஸ்கிருத கிராமம்!

கொடுக்கும் பணியை ஆரம்பித் தோம். இன்றும் எங்களுடைய முயற்சி தொடர்ந்துகொண்டிருக்கிறது'' என்கிறார் ஸ்ரீநிதி.

சம்ஸ்கிருதப் பேச்சுப் பயிற்சி பெரிய அள வில் தொடங்கியது. தினம் இரண்டு மணி நேரம் வீதம் பத்து நாட்களுக்குள் சம்ஸ்கிருதத் தில் பேசுவது எப்படி என்று சொல்லித் தரும் அந்தப் பயிற்சிக்கு, மாநிலம் முழுமை யிலிருந்தும் நல்ல வரவேற்பு கிடைத்தது. மத்தூரில் மூன்று பேட்ச்களாக நடந்த பயிற்சி வகுப்புகளில் சுமார் 100 பேர் சேர்ந்து, சம்ஸ் கிருதத்தில் பேசக் கற்றுக்கொண்டார்கள். அந்தப் பயிற்சி வகுப்புகளின் நிறைவு நிகழ்ச்சியில் கலந்து கொண்ட உடுப்பி பெஜாவர் மடத்தின் பீடாதிபதி, தம் ஆசி

"மக்கள் மத்தியில் சம்ஸ்கிருத அறிவை வளர்க்க சம்ஸ்கிருத பாரதி, சமை யல் அறை, பூஜை அறை, படுக்கை அறை, தோட்டம், டி.வி, ஃப்ரிட்ஜ், விளக்கு என்று வீட்டுக்குள்ளே இருக்கும் இடங்கள் மற்றும் பொருட்களின் பெயர்களை சம்ஸ்கிருதத் தில் அச்சிட்டு ஸ்டிக்கர்களாக்கி, அவற்றை வீட்டில் ஒட்டி வைக்கச் சொல்லி வினி யோகிக்கிறோம். அந்த வார்த்தைகளைத் தங் கள் உரையாடல் களின்போது பயன்படுத்து கிறார்கள். பள்ளி மாணவர்களுக்கு சம்ஸ் கிருதத்தில் போட்டிகள் நடத்தி, பரிசுகள் அளித்து ஊக்குவிக்கிறோம்.

மத்தூரில் வேத பண்டிதர்கள் வசிக்கும் நாலைந்து தெருக்களைத் தவிர மற்ற

தெருக்களில் பலவிதமான ஜாதி, இன, மதங்களைச் சேர்ந்தவர்கள் கலந்து வசிக்கிறார்கள். அவர்களுக்கு சம்ஸ்கிருதம் தெரியாவிட்டாலும், அவர்களுடைய குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் சம்ஸ்கிருதம் கற்றுக் கொள்கிறார்கள். இது மத்தூரில் வசிக்கும் இஸ்லாமிய இனத்தவருக்கும் பொருந்தும். அக்கம்பக்கத்து கிராமங்களைச் சேர்ந்த மக்கள் பலர், தங்களுடைய குழந்தைகளும் சம்ஸ்கிருதம் படிக்க வேண்டும் என்ற விருப்பத்தின்பேரில், மத்தூர் பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு வந்து சேர்க்கிறார்கள்'' என்கிறார் ஸ்ரீநிதி.

''காலம் மாறிவிட்டது. மத்தூரைச் சேர்ந்த இளைஞர்கள் பலரும் படித்துவிட்டு, பல்வேறு ஊர்களுக்கும் வேலைக்குச் சென்றுவிட்டார்கள். அவர்களில் சம்ஸ்கிருத அறிவு காரணமாகவும், கம்ப்யூட்டர் பயிற்சி காரணமாகவும், கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் துறையில் நுழைந்து நிறைய சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள். படித்த பெண்கள், இந்தக் கிராமத்தில் வசிக்கும் வேதம் படித்த இளைஞர்களைத் திருமணம் செய்துகொள்ள மிகவும் தயங்குகிறார்கள். வாழ்க்கை என்பது பணம் சம்பாதிப்பதற்கான ஓட்டம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதை எல்லாம் என்னால் ஜீரணித்துக் கொள்ளவே முடியவில்லை'' என்று ஆதங்கப்படுகிறார் வேத விற்பன்னரான அஸ்வத் நாராயண் அவதானி.


* கோபால்


* ஸ்ரீநிதி


* மாணவிகள்...



தமிழ்நாட்டிலிருந்து கூலித் தொழிலாளியாக மத்தூருக்கு வந்து, இப்போது வசதியாக வாழ்ந்து கொண்டிருக்கும் கோபால், ''மத்தூர் ரொம்ப அமைதியான ஊருங்க; ஜனங்க நல்ல சுபாவம் கொண்டவங்க; இங்கே ஜாதிப் பிரச்னை எதுவும் வந்ததில்லை; போலீஸ் கேசு எதுவும் ஆனதில்லை'' என்கிறார்.



* கிரீஷ்



* அஸ்வத் நாராயண் அவதானி



மத்தூர் வேத பண்டிதர்களின் நதி மூலம், தமிழ்நாடு. கிருஷ்ணதேவராயர் காலத்தில் ஒரு பிரம்மாண்டமான யாகம் நடத்தியபோது, தென் தமிழ்நாட்டின் பல கிராமங்களிலிருந்தும் நூற்றுக்கணக் கான வேத விற்பன்னர்கள் வரவழைக்கப் பட்டார்களாம். யாகம் முடிந்தவுடன், அவர்களுக்கெல்லாம் ஏராளமாக நில புலன்களை அளித்து, தம் சாம்ராஜ்ஜியத் திலேயே நிரந்தரமாகத் தங்கிவிடும்படி கேட்டுக்கொள்ள, அவர்களும் ஆங் காங்கே சிறு சிறு கிராமங்களாக செட் டில் ஆகிவிட்டார்களாம். அப்படி உரு வான ஊர்களில் ஒன்றுதான் மத்தூர். இன்றுகூட வேத பண்டிதர்களுக்கு வரு மானம் அவர்களுடைய பாக்குத் தோப்பு களில் இருந்துதான். சொல்லப் போனால் மத்தூர் மக்களின் வாழ்க்கையும், கிராமத் தின் பொருளாதாரமும் அவற்றைச் சார்ந்தே உள்ளன. தெருக்களில் நடந்து செல்லும்போது கிராமத்துப் பெண்கள் பாக்கு காய்களை உடைத்துக் கொட்டை களை எடுத்துக் கொண்டிருப்பதையும், வீட்டுக்கு வெளியில் பாக்கு காயப் போட்டிருப்பதையும் காணலாம்.

சம்ஸ்கிருதம் சொல்லித் தரும் சாரதா விலாசம் பள்ளியின் சம்ஸ்கிருத ஆசிரியர் கிரீஷை அழைத்துக்கொண்டு மத்தூர் தெருக் களில் ஒரு வீதி உலா வந்தோம். கண்ணில் பட்ட ஸ்கூல் குழந்தைகளிடம் எல்லாம் அவர் சம்ஸ்கிருதத்தில் பேச, அவர்களும் சம்ஸ்கிருதத்திலேயே தயங்காமல் பதில் சொன்னார்கள். தெருவில் சைக்கிளை ஓட்டிக் கொண்டு வந்த சுதேஜாவை நிறுத்த, கிரீஷ் அவனுடன் சில நிமிடங்கள் வெகு சரளமாக சம்ஸ்கிருதத்தில் உரையாடியதைக் கேட்க முடிந்தது.

இந்தியாவின் வேறு எந்தக் கிராமத்திலும் இல்லாத அளவுக்கு இங்கே அதிகமான எண்ணிக்கையில் சம்ஸ்கிருதம் பேசுகிற வர்கள் வசிக்கிறார்கள். ஆனாலும், ஊரின் பெயர்ப் பலகை கன்னடத்தில்தான் எழுதப் பட்டுள்ளது. சம்ஸ்கிருதம் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் சம அளவில் இருக் கிறார்கள். அப்படி இருக்கும்போது, எங்கள் ஊரை, ''நூறு சதவிகிதம் சம்ஸ்கிருதம் பேசுகிறவர்கள் வசிக்கும் கிராமம் என்று எப்படிச் சொல்லிக் கொள்ள முடியும்? ஒரு நாள் நிச்சயமாக அந்த மாதிரியான ஒரு பெருமை இந்தக் கிராமத்துக்குக் கிடைக் கும். அன்று அதைப் பறைசாற்றும்படி யாக ஊர் பெயர்ப் பலகையை வைத் துப் பெருமைப்படுவோம்'' என்கிறார் ஸ்ரீநிதி.

**க**ண்ணுக்குத் தெரியாத
எதிரெதிர் அலைகளால்
அசையவியலாது கிடப்பதை
அந்த அறைக்குள்
சலனமற்று சுழலும்
காற்றலை தவிர
வேறெதுவும் உணர்வதற்கில்லை.
காலக் காற்று புரட்டாதா?
அருகருகே இருந்தும்
முகம் திருப்பியபடி கிடக்கும்
அவ்விரு காந்தத் துண்டுகளை

- கொற்றவன்

**ம**லரும் நினைவுகளுக்கான
மகரந்தச் சேர்க்கையாய்
சேமிக்கப்பட்ட
சின்னச் சின்ன அடையாளங்களில்,
காலம், பிழிந்துதரும் தேனை!
சுவைத்துப் பார்த்துக் கொள்கிறது.
வறண்டபோதெல்லாம்
மனத்தின் நா...!

- க. சங்கரபாண்டியன்

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச் சீக்கிரமா 'கவிதை கஃபே'க்கு குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# கவிதை கஃபே

"அப்பா ஃபோன் பேசறார் பாரு,
அப்பாக்கு ஹலோ சொல்லு, ஹலோ சொல்லு"
ஊஹூம்... வாயைத் திறந்தால்தானே?
ஃபோனை வைத்தவுடன் குழந்தை கத்துகிறது
"அலோ... ப்பா!"

- விஜிமுத்து

**'கவிதை கஃபே' பகுதியில் இடம்பெறும் கவிதைகளுக்கு சன்மானம் உண்டு.**



# பலூன் குட்டி!

● மிஸ் என்று அழைக்க
மிரட்டியும் பார்த்தார்கள்
எதையும் சொல்லவில்லை
'...ம்மா'வைத் தவிர!

● முந்தைய நாள் வாங்கிய
ஆப்பிள் வடிவ பலூன்
காலையில்
உருவம் சிறிதாகியிருந்தது
கண்கள் விரிய
மகள் சொன்னாள்...
''பெரிய பலூன்
குட்டிப் போட்டுட்டு
போயிருக்குப்பா!''!

● மனனம் செய்த
மளிகைப் பொருட்களை
ஜெட் புகையில்
தவற விட்டு,
வீட்டுக்கே திரும்புகிறது
குழந்தை!

● சிங்கமாய் உறுமியும்
யானையாய் பிளிறியும்
கார்ட்டூன் பாத்திரங்களாய் பேசியும்
காட்டிய குழந்தை
மௌனித்தது
உன் அப்பா அம்மாவைப் போல்
நடி என்றபோது!

- ஜா. பிராங்க்ளின் குமார்

விளக்கில்லா வீட்டில்
பயமின்றி
இரவு முழுதும் தங்கி
ஓய்வெடுத்து
விடிந்ததும் புறப்பட்டுப் போனது
இருட்டு!

- மீனாசுந்தர்



அனல் பேச்சுக்கு கருகாது
ஐஸ் வார்த்தைக்கும் உருகாது
எச்சில் மழையில் நனைந்தாலும்
ஜலதோஷம் பிடிக்காத ஜாதி
அரசியல் சாக்கடையில்
தேர்தல் மீனுக்காக
தவமிருக்கும் ஒற்றைக்கால்
மின்சாரக் கொக்கு
சில நேரம் சிறகில்லாமல்
பறக்கும் சட்டசபையின்
இயந்திரப் பறவை.

- ராஜு

ஜெயம் ரவிக்கு 'ஜெயம்' தொடங்கி 'தில்லாலங்கடி'வரை எல்லா படங்களுமே சக்ஸஸ் கோட்டைத் தொட்டப் படங்கள். தொடர் வெற்றிகள் தோளில் இருந்தாலும் எப்போதும் தெளிந்த நீரோடையைப் போல் பக்குவப்பட்ட மனிதனாய்ப் பேசுவது ஜெயம் ரவி ஸ்டைல்.

பிரபுதேவாவின் 'எங்கேயும் காதல்', அமீரின் 'ஆதிபகவான்' படங்களின் ஷூட்டிங்காக வெளிநாடுகளிலேயே இருந்தவர், தீபாவளிக்காக சென்னை வந்தபோது சிக்கென்று சிக்கினார்.

**'எங்கேயும் காதல்' எப்படி வந்திருக்கு?**

'டைட்டிலில் கொட்டிக் கிடக்கும் காதலைப் போலவே படம் முழுவதிலும் பரவிக்கிடக்கிறது காதல்.



ஹாரிஸ் ஜெயராஜ் இசையில் அத்தனை பாடல்களும் காதல் ஹனி. பிரபுதேவா ரொம்பவே மெனக்கெட்டுக் காட்சி அமைப்புகளை உருவாக்கியிருக்கிறார். நிரவ் ஷாவின் ஒளிப்பதிவு படத்துக்குப் புது கலரைக் கொடுத்திருக்கிறது. தொண்ணூற்று ஒன்பது சதவிகித படம் முடிவடைந்த நிலையில் ஒரு பாடல் காட்சி மட்டும் நியூசிலாந்தில் படமாக்கப் பட இருக்கிறது.''

**'இச்' டைட்டிலே கிக்கா இருந்ததே... அதை ஏன் மாத்துனீங்க?**

''எல்லோருமே கேக்குறாங்க பாஸ். 'இச்'சுங்கறது தமிழ் வார்த்தையாங்கற கேள்வி எழுது. அதனாலதான் அதைவிட கேட்சிங்கா பிரபுதேவா பிடிச்ச டைட்டில்தான் 'எங்கேயும் காதல்.' இந்த டைட்டிலும் படத்துக்கு ஹண்ட்ரட்டு பர்சண்ட் ஏற்ற டைட்டில்தான். படம் பார்த்தா நிச்சயம் எல்லோருமே உணருவீங்க.''

**பிரபுதேவா படம்னா காமெடி, டான்ஸ் எல்லாம் தூக்கலா இருக்கும். ஜெயம் ரவி படம்னா குடும்பப்பாங்கான விஷயங்கள் இருக்குமே?**

''எல்லாமே இருக்கும். நல்லாவே இருக்கும். கூடவே காதலுக்கு ஹன்சிகா அவ்வளவு அழகு. அவர் ஒவ்வொரு படங்களுக்கும் மெச்சும்படியான உழைப்பைத் தந்து கொண்டிருக்கிறார். ஒவ்வொரு பிரேமிலும் டான்ஸ் மூவ்மெண்ட் அவ்வளவு அழகா பண்ணியிருக்கார்.''



# நழுவிப் போன 'இச்'!

**'ஆதிபகவான்' கடவுளோடு முடிச்சு போடும் படமா?**

''அய்யய்யோ இதென்ன புது கதையா இருக்கு. இந்தப் படத்தைப் பத்தி நீங்க எது கேட்க வேண்டுமானாலும் அமீர் சாரைத்தான் கேட்க வேண்டும்.''

**இயக்குனர் அமீரோடு வொர்க் பண்ணிய அனுபவங்கள் எப்படி இருக்கு?**

''அமீர் படங்கள்னா கேரக்டர் பத்தியே அதிகம் பேசப்படும். எந்தவொரு விஷயத்தையும் அவ்வளவு நுணுக்கமா, ஆழமா பண்றார். ஒவ்வொரு ஃபிரேமும் முதல் ஃபிரேம் போலவே பாக்கறார். களம் புதிது; கதை புதிது, மனிதர்கள் வேறு உலகம். தாய்லாந்தில் 2 ஷெட்யூல் முடிஞ்சிருக்கு. நடிப்பில் இதுவரை ஸ்கூல் பையனாகப் பார்த்து பழக்கப்பட்ட ஜெயம் ரவியை யுனிவர்சிட்டியில் படித்த பையன் போல 'ஆதிபகவான்' காட்டும். மனதுக்குச் சரி என்று தோன்றும்வரை விடவே மாட்டார் அமீர். அந்த விடாப்பிடியான குணம்தான் அவரது காரணம்.''

**அண்ணன் ராஜாவோடு எப்போ கூட்டணி?**

''அண்ணன், விஜய்யோட 'வேலாயுத'த்துல பிஸியா போய்ட்டு இருக்கார். நான் அமீர் சாரோட 'ஆதிபகவான்' போய்ட்டு இருக்கேன். ரெண்டும் முடியட்டும். புதுசா ஃப்ரெஷ்ஷா பண்ணுவோம்'' என்று ஃப்ரிட்ஜுக்குள் வைத்த ஆப்பிளைப் போல அழகாகச் சிரிக்கிறார்.

**- பொள்ளாச்சி ராஜ்குமார்**



# தேவி 'சிரி' பிரசாத்!

**சி**றப்பு நிகழ்ச்சி ஒன்றில் சன் டி.வி.யில் இரவு 10 மணிக்கு இசையமைப்பாளர் தேவி ஸ்ரீ பிரசாத்-சிட்டிபாபு பேட்டி ஒளிபரப்பானது.

மிகவும் நல்ல நிகழ்ச்சி. மனம்விட்டுச் சிரிக்கும்படி இருந்தது. இசையமைப்பாளர் தேவி ஸ்ரீ பிரசாத், சிட்டிபாபு கேட்கும் கேள்விகளுக்கு சிரித்தபடி பதில் சொன்னதும், சிட்டிபாபுவின் நையாண்டி முகமும் மனத்தை இலேசாக்கியது. பேசாமல் தேவி ஸ்ரீ பிரசாத் தமது பெயரை தேவி சிரி பிரசாத் என்று மாற்றி வைத்துக் கொள்ளலாம். இசையமைப்பாளரால் அன்று ரிலாக்ஸ்டாகத் தூங்கினேன்.

**- எ.எஸ். யோகானந்தம், ஔவையார் பாளையம்**

## இயற்கையின் நியதி!

**அ**னிமல் பிளானட் சேனலில் ஒரு நிகழ்ச்சி: ஓர் அடர்ந்த வனம். அதில் ஒரு சிற்றோடை. அதில் ஒரு மான் குட்டி நீர் அருந்திக் கொண்டிருக்கிறது. அந்த மான் குட்டியைத் தூரத்தில் இருந்த ஒரு புலி பார்த்துவிடுகிறது. மெல்ல மெல்ல அடிமேல் அடி வைத்து அந்த மான்குட்டியை நோக்கி நகர்கிறது புலி. அதை எப்படியோ கவனித்துவிடுகிறது மான்குட்டி. உடனே தம் காதுகளை விடைத்துக்கொண்டு ஓட ஆரம்பித்து விடுகிறது அந்த மான்குட்டி. 'மான் வேகம் மனோவேகம்' என்போமே அதுபோல ஓடுகிறது.



**டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்' என்**

# சேனல் சாய்ஸ்



## நிஜத்தின் குறை!

அழகாய் அலங்காரம் செய்து விட்டு, கடைசியில் அதன்மீது சாணியை அடித்தால் எப்படி இருக்கும்?

சன் டி.வி.யில் ஒளிபரப்பாகும் 'நிஜம்' தொகுப்பில் கேரளாவை ஒட்டிய, தமிழக எல்லையில் உள்ள ஒரு கிராமமான கலங்காதகண்டி கிராமம் பற்றியும், அங்குள்ள புதையல் ஊற்று பற்றியும் மிகச் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டினர். அந்தப் பகுதியை ஆண்ட மன்னர், தான் கட்டிய அணை உடையாமல் இருப்பதற்காக, தமது மகளின் காதலனைப் பலியிட்டதாகவும் நடந்தது அறிந்து பிறகு அந்த மகள் தற்கொலை செய்து கொண்டதாகவும், இவை நடந்ததை நிரூபிக்க இன்றும் அங்கு பலியானவர் சிலையும், பெண் தற்கொலை செய்து கொண்ட இடத்திலிருந்து மஞ்சளும் தொடர்ந்து வெளிப்படுவதையும் சிறப்பாக எடுத்துரைத்தனர். மேலும் அந்தக் கிராம காவல் தெய்வம் பகவதி இசக்கியம்மன் பற்றி எடுத்துரைத்து வியப்பை அளித்தனர்.

ஆனால், இவ்வளவையும் செய்துவிட்டு, கடைசியில் நிரூபிக்காமல் புதையல் ஊற்று... அதில் இருப்பதாகக் கூறப்படும் பொருட்கள்; நம்பிக்கைகள் என எல்லாமே... சரியான கட்டுக் கதைகள் என்பதே நிஜம் என முடித்தது... ஒரு நல்ல தொகுப்புக்கு திருஷ்டியாய்... பலவீனமாய்... அபத்தமாய் இருந்தது.

- கிருத்திகா பிரகாஷ்,
பெங்களூரு

பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ.50 பரிசு!

என்னதான் ஓடினாலும் ஒரு மான்குட்டி புலியிடமிருந்து தப்பிக்க முடியுமா? புலியின் சிறிது நேரத் துரத்தலுக்குப் பின் மான் குட்டியை நெருங்கித் தன் முன்னங்கால்களால் மான்குட்டியின் பின் பக்கத்தை ஒரு தட்டுத் தட்டுகிறது. மான்குட்டி கீழே விழுந்து துள்ளித் துள்ளிப் புரள்கிறது. புலி மேலும் ஒரு தட்டு... மான்குட்டி புரள்வது நின்று விடுகிறது. இப்போது அது தன் உயிருக்குப் போராடுகிறது.

இப்போது அந்த மான் குட்டி புலிக்கு இரை. நமக்கு மனம் என்னவோ செய்கிறது. நம் சிந்தனையும் விரிவாகிறது. 'மனிதருள் உயிர்க்கொலை பாவம்' என்ற நிலையில் வனங்களில் வலிய மிருகங்களுக்கு எளியவை பலி ஆவது ஒரு நியதியாக அல்லவா இயற்கை வகுத்து வைத்துள்ளது.

ஆக, அவைகளுக்குள் உயிர்க்கொலை என்பது இயல்பானதாகவே இருக்கிறது. புலி பசித்தாலும் புல்லைத் தின்ன முடியாத நிலைதானே வனத்தில் நிலவுகிறது.

'பரிணாம வளர்ச்சியில் தப்பிப்பவை பிழைத்துக்கொள்ளும்' என்று அந்த எளியவைகளுக்காக நாம் பரிதாபப்பட்டு ஆறுதல் அடைவதைத் தவிர வேறு வழியில்லை.

- ஆர்.ஆர்.பூபதி,
கன்னிவாடி

குறிப்பிட்டு எழுதுங்க. kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.



## வே.எழிலரசு

ஓடிவந்து என் கழுத்தைக் கட்டிக்கொண்டு
உன் கன்னம் உரச நீ பேசும்பொழுதெல்லாம்
விதவித வண்ணங்களாய்
என்னுள் பெய்கிறது மழை

– நீலா ரசிகன்

**வி**டுமுறையில் கிராமத்துக்கு வரும் பொழுதெல்லாம் உதய குமார் கருக்கலில் கண்விழித்து, முருகன் குன்றம் சென்றடைந்து, தியானத்தில் அமர்வான். அவன் கண்களை மலர்த்தும் பொழுதில் சூரிய உதயம் நிகழும். அந்தக் காட்சி அனுபவம் மனத்திலும் உடலிலும் பாய்ச்சும் சக்தியில், கடந்துபோன நிகழ்வுகளின் காயங்கள் ஆறிவிடும். இனி வரப்போகும் சவால்களைச் சந்திக்க புதியதான ஊற்று உள்ளுக்குள் சுரக்கும்.

மாலைப் பொழுதுகளில் தமது புல்லட்டில் குமரி முனைக்குச் செல்வான். முப்பத்தெட்டு அடி பீடத்தில், தொண்ணூற்று ஐந்து அடி உயரமாக - கம்பீரமும் கனிவும் கூடிய தோற்றத்தோடு அருள்வடிவமாக நிற்கும் அந்த மகா பெரியவரைப் பார்த்துக் கொண்டிருப்பான். அதன் பிறகு ஜீவா நகர் செல்வான். குடிசைகள் நிறைந்து கிடக்கும் மீனவ

குப்பம். அங்கு குடிசைகளுக்கு மையத்தில் ஒரு காங்கிரீட் குடிசையாக நிற்கும் சின்ன மாதா கோயிலில்தான் ஃபாதர் நவமணி ஆபிரகாம் இருக்கிறார்.

சாலையில் மணலே நிறைந்து கிடந்ததால் புல்லட்டின் சக்கரங்கள் புதைந்து, நிமிர்ந்து, ஊர்ந்து சென்றது. கோயிலுக்குத் திரும்பும் சாலையில் திருப்பத்திலிருந்த முதல் குடிசையின் வாசலில் அமர்ந்து சிம்னி விளக்கின் குமிழைத் துடைத்துக் கொண்டிருந்த அந்தப் பெண், உதயகுமாரைப் பார்த்ததும் எழுந்து நின்றார். சிம்னி விளக்கின் குமிழைப் போலவே பளிச்சென்றிருந்த அவரின் முகம் நிறைய சிரிப்பும் சிநேகமும். அவரின் புன்னகைக்குப் பதில் முகமனாக உதயகுமாரும் புன்னகைத்தான்.

# காதல் கேம்பஸ்

'ஒவ்வொரு முறை நான் ஃபாதரைப் பார்க்க வரும்பொழுதும் இந்த அம்மாவை வழியில் பாக்குறேன். என்னை ரொம்பத் தெரிஞ்சவங்க மாதிரி நடந்துக்கறாங்க. இவுங்க யாரு?' என்று வழக்கமாகக் குடையும் கேள்வி அப்பொழுதும் தோன்றியது. புல்லட் ஓசை கேட்டு கோயிலின் உள்ளிருந்து ஃபாதர் வெளியே வந்தார்.

''வணக்கம் ஃபாதர்''

''வா உதயகுமார். எப்ப சென்னையிலிருந்து வந்த?''

''நேத்து காலையில் வந்தேன் ஃபாதர்''

கோயில் வாசலில் கடலைப் பார்த்தபடி இருந்த சிமெண்ட் பெஞ்சில் உதயகுமாரும் ஃபாதர் நவமணி ஆபிரகாமும் அமர்ந்தனர்.

''அப்புறம் சொல்லுங்க ஃபாதர் இந்த வருஷம் எனக்கு என்ன அசைன்மெண்ட் தரப்போறீங்க?''

ஃபாதர் அமைதியாக இருந்தார்.

உதயகுமார் உயர்நிலைப் பள்ளியில் படித்த காலத்திலிருந்து ஃபாதர் நவமணி ஆபிரகாம் ஒவ்வொரு ஆண்டும் ஏதாவது சமூகப் பணியில் உதயகுமாரையும் அவன் நண்பர்களையும் ஈடுபடுத்தி வந்தார்.

குடிசைப்பகுதிகளைத் தேர்ந்தெடுத்து அங்கு சென்று விழிப்புணர்வை ஏற்படுத்துதல், அரசு நலத் திட்டங்கள் முறையாகச் சென்று சேர வேண்டியவர்களுக்குத் துணை புரிதல், மத நல்லிணக்கக் கருத்தரங்குகளை நடத்துதல் - இப்படி ஏதாவது ஒன்றை செய்யச் சொல்வார் ஃபாதர்.

அவன் ஃபாதரைப் பார்க்க வரும் பொழுதே ஃபாதர் ஏதாவது திட்டத்தோடு காத்திருப்பார். திட்டத்தை உற்சாகமாக விவரிப்பார். அனுபவம், வயது, கல்வித் தகுதி என்ற பேதங்கள் இல்லாமல் ஆலோசனைகள் கேட்பார். ஆனால் இப்பொழுது அமைதியாக நிலவின் ஒளிப் பாடலுக்கு குழு நடனப் பயிற்சி செய்யும் கடலலை



களைப் பார்த்துக்கொண்டிருந் தார். பின்பு தொண்டையைச் செருமிக் கொண்டு துயரம் தோய்ந்த குரலில், ''உதயகுமார் பத்து வருஷத்துக்கு முன்னால புயல் வந்தப்போ இந்தக் கரையில செத்துப்போனவங்கள்ல முத்துக் கருப்பனும் ஒருத்தன்.''

உதயகுமார் ஃபாதரையே பார்த்தான்.

''அவன் ஓர் அற்புதமான ஆத்மா'' என்று சொல்லிய ஃபாதரின் கண்களிலும் கடல் மின்னியது.

''உதயகுமார் நீ முத்துக்கருப்பனோட மகன் ஆனந்தை பொறுப்பேத்துக்கணும். இப்ப பிளஸ் டூ எக்ஸாம் எழுதியிருக்கான். நிச்சயமா நல்ல மார்க் வாங்கித்தான் பாஸ் பண்ணுவான்.''

''ஃபாதர் அது ஒண்ணும் பெரிய விஷயமில்லை. ஆனந்த் காலேஜ்ல சேந்து படிக்கறதுக்கு என்ன செலவாகுமோ... அதை நான் ஏத்துக்கறேன்.''

தமது பதிலில் ஃபாதர் திருப்தியுற்று மகிழ்ச்சியாகத் தலை அசைப்பார் என்று எதிர்பார்த்திருந்த உதயகுமார் ஏமாந்து போனான். ஃபாதர் உதயகுமாரைப் பார்த்தபடி சொன்னார், ''உதய் நான் எதிர்பார்க்கறது வேற.''

''சொல்லுங்க ஃபாதர்.''

''நீ ஆனந்தை சென்னைக்கு அழைச்சுட்டு போகணும். நீ படிக்கிற காலேஜ்லய படிக்க வைக்கணும். உன்னோட நேரடி கண்காணிப்புலதான் அவன் வளரணும்...''

உதயகுமாருக்குச் சங்கடமாக இருந்தது. இதுவரை ஃபாதர் சொன்னது எதையும் மறுத்துப் பேசியதில்லை.

''ஃபாதர் எனக்கு யோசிக்க அவகாசம் வேணும்.''

இப்பொழுது ஃபாதர் நவமணி ஆபிரகாம் திருப்தியாகத் தலையாட்டினார். ஃபாதருக்கு எப்பொழுதுமே தமது கருத்தை எந்தவித விசாரணையும் இல்லாமல் அப்படியே ஏற்றுக் கொள்கிறவர்களைவிட சுய சிந்தனையோடு அலசி ஆராய்பவர்களை ரொம்பவும் பிடிக்கும். உதயகுமாரை அவர் முழுமையாக அறிவார்.

''ஃபாதர் நான் ஒரு முடிவுக்கு வர்றதுக்கு முன்னால ஆனந்தை சந்திச்சுப் பேசணுமே.''

ஃபாதர் தமது வலது கரத்தில் கட்டியிருந்த வாட்சைப் பார்த்தார்.

பல தேசத்து நேரங்களை அது வட்ட வட்டமாகக் காட்டிக் கொண்டிருந்தது.

''ஆனந்த் இப்ப எங்க இருப்பான்னு எனக்குத் தெரியும். வா போலாம்.''

''எங்க இருப்பான் ஃபாதர்?''

''இன்னிக்கு வந்த டூரிஸ்ட்டுகளை ரயில் ஏத்தி விட்டுட்டு பக்கத்துலய




குகானந்தீஸ்வரர் கோயில்லதான் இருப்பான்... காலையிலேயே புறப்படும்போது சொன்னான்.''

''கோயில்லயா... பையனுக்கு ரொம்ப பக்தியோ...''

''பக்தியா... இல்லை ஆயிரம் வருஷ கோயிலுங்கறதால ஏற்பட்ட ஆர்கியாலஜி இன்ட்ரஸ்டா... தெரியலைப்பா''

பைக்கை ஸ்டார்ட் செய்யும்போது, ''ஃபாதர் டூரிஸ்ட்டுகளை ரயில் ஏத்திவிட போயிருக்கானு சொன்னீங்களே...''

''ஆமாப்பா. இப்ப சீசன் டைம் இல்லையா... ஆனந்த் பார்ட் டைமா டூரிஸ்ட் கைட் வேலை பார்க்கறான்.''

குளிர்ச்சியான உப்புக் காற்றில், உயிர்பெற முரண்டு பிடித்தது புல்லட்டின் எஞ்சின்.

உதைப்பதை நிறுத்திவிட்டு, உதயகுமார் ஆச்சர்யமாகக் கேட்டான்.

''டூரிஸ்ட் கைடாவா... இந்தச் சின்ன வயசுலயா?''

''சின்ன வயசா... ஆனந்த் விவேகானந்தர் பாறை மீது நின்னு கன்னி அம்மனின் புடைப்புக் காலடி தடத்தைப் பத்தி சொல்றதை நீ கேக்கணும் உதய்... அது ஓர் ஆனந்தமான அனுபவம்.''

கடற்கரையின் நிலவெரிக்கும் முன் இரவு பொழுதொன்றில் ஆனந்த் தன்னிடம் ஒரு கைடாக ஒத்திகை பார்த்ததை நினைத்துச் சிரித்தார் ஃபாதர்.

''ஆனந்துக்கு நல்ல ஹிஸ்டரி நாலெட்ஜா...?'' உதயகுமார் பைக்கை ஸ்டார்ட் செய்தபடி கேட்டான்.

பின்னால் ஏறி அமர்ந்த ஃபாதர், ''பையனுக்கு நல்ல கிரியேடிவிடியும் இருக்கு.''

அப்பொழுதே உதயகுமார் ஒரு முடிவெடுத்து விட்டிருந்தான்.

களைவதை நிறுத்திய அந்தப் பெண்மணி எழுந்து பைக்கின் அருகே வந்தார். முகம் முழுக்க அதே சிரிப்பும் சினேகமும்.

''உதய் இவுங்க ஆனந்தோட அம்மா...''

உதயகுமாருக்கு எப்பொழுதோ எங்கேயோ அந்தப் பெண்மணியைப் பார்த்தது போல் இருந்த ஆழ் மன உணர்வு உறுதிப்பட்டது. ஆனால் முடிச்சு அவிழவில்லை. அந்தச் சிரிப்பிலும் சினேக முக பாவத்திலும் மனம் கரைந்து இரண்டு கைகளையும் கூப்பி ''வணக்கம்மா'' என்றான். பதிலுக்கு அந்தப் பெண் வணக்கம் சொல்லவில்லை. உதயகுமாரின் இரண்டு கன்னங்களிலும் கைகளை வைத்து, இழுத்து தன் கரங்களைத் தனது நெற்றியில் பக்கவாட்டில் வைத்து நெட்டி முறித்து திருஷ்டி கழித்தாள்.

கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டாள்.

அரிசி கழுவிய தண்ணீரின் ஈரம் உதயகுமாரின் கன்னங்களில் சில்லென்றிருந்தது.

---

**"கலைஞரின் வசனத்தில் ஹீரோயினாக 'இளைஞன்' படத்தில் நடிக்க வாய்ப்பு கிடைச்சது என்னோட பகவதி அம்மன் அருள்தான்" என்று சொல்லும் ரம்யா நம்பீசனுக்கு ராகுல்காந்திதான் இந்தியாவின் எதிர்காலம் என்பதில் மாற்று கருத்து இல்லையாம். (அம்மணி இது என்ன கூட்டணி கருத்தா? இல்லை... காங்கிரஸில் சேர எண்ணமா?)**

**- ராகவ்குமார்**

---

பைக் - கோயிலின் பக்கவாட்டுச் சாலையில் திரும்ப கடந்தபோது, அந்தப் பெண்மணி குடிசை வாசலில் அமர்ந்து அரிசி களைந்து கொண்டிருந்தார். பைக்கின் முகப்பு வெளிச்சம் முகத்தில் பட, அரிசி களைந்து கொண்டிருந்த கையால் முகத்தை மறைத்தார்.

உதயகுமார் விளக்கின் பிரகாசத்தைக் குறைத்ததோடு, ஒளி பாய்ச்சலின் இலக்கையும் மாற்ற பைக்கை இலேசாகத் திருப்பினான். குடிசை வாசலைக் கடக்கும் தருணத்தில் ஃபாதர் உதயகுமாரின் தோளைத் தொட, உதயகுமார் பைக்கை நிறுத்தினான். முன்னூற்றைம்பது குதிரை சக்தி எஞ்சின் உறுமிக் கொண்டிருக்க, அவன் உடல் இலேசாக அதிர்ந்து கொண்டிருந்தது. அரிசி

உதயகுமாருக்கு ஆச்சர்யமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

உதயகுமார் தம்முடைய அம்மாவிடம் ஆனந்தைப் பற்றியும் அவனது அம்மாவை சந்தித்தது பற்றியும் சொல்லிவிட்டு, ஆனந்தை தான் சென்னைக்கு அழைத்துச் சென்று படிக்க வைக்க முடிவெடுத்திருப்பது பற்றியும் சொன்னபோது, உதயகுமாரின் அம்மா கண்கள் கலங்க சொன்னாள், ''அது உன்னோட கடமைப்பா. ஏன்னா ஆனந்த் உனக்கு ஒரு முறையில் தம்பி.''

அம்மாவிடமிருந்து வெளிப்பட்ட இந்தச் செய்தியில் உதயகுமார் உள்ளுக்குள் ஆடிப்போனான். கேட்கலாமா? கூடாதா? என்ற தயக்கத்தோடு, ''எப்படி?'' என்றான்.

**(தொடரும்)**





# சுவடின் மீது படிந்த நிழல்!



வட இந்தியப் பெண்ணான ஜினால் சாங்கொய் (18) மதுரையில் பொருளாதாரம் படிக்கும் கல்லூரி மாணவி. "தென் இந்தியப் படிப்பும் வாழ்வும்தான் என்னை ஓவியத்துக்குத் திசை மாற்றியது. வட இந்திய ஆதிவாசிகளின் சுவடுகளின் மீது தென்னிந்திய ஆன்மிக நிழலைப் படிய வைக்கிற வண்ண யுக்திதான் என் ஓவிய பாணி. ஓவியம் தீட்டும்போதுதான் என்னை நானாக உணர்கிறேன்" என்று சொல்லும் இவர் தனது முதல் கண்காட்சியை சமீபத்தில் நடத்தியுள்ளார்.



- சசி

ஃபோட்டோ: சின்னராஜ்

கதை என்றால், அதில் நல்ல பாத்திரங்களும் வருவார்கள். துஷ்ட பாத்திரங்களும் வருவார்கள்.

பிராமணர்களைப் பற்றி யார் என்ன எழுதினாலும் அதைப் பற்றிச் சாதாரணமாக ஆட்சேபம் ஏற்படுவதில்லை. கதை படிப்பவர்களில் சிலர் அருவருப்படைவார்கள்; சிலர் சிரிப்பார்கள்; ஆனால், யாரும் சண்டைக்கு வர மாட்டார்கள்.

ஆனால், ஒரு செங்குந்தரையோ, ஒரு வன்னிய குலத்தாரையோ, ஒரு கவுண்டரையோ, ஒரு விசுவ குலத்தாரையோ, ஒரு ஹரிஜன சகோதரரையோ கதையில் பொல்லாதவனாகச் செய்திருந்தாலும், பரிகாசம் செய்திருந்தாலும் வந்தது மோசம்; அந்தக் குலத்தைச் சேர்ந்தவர்கள் கதையைப் படிக்க நேர்ந்துவிட்டால் ஆசிரியரோடு துவந்த யுத்தம் செய்ய வந்துவிடுவார்கள்.

இதன் காரணமாக, மற்ற சாதிகளைச் சேர்ந்த எழுத்தாளர்கள்கூடத் தத்தம் சமூகக்

# உண்மை ஒளி!

குடும்ப வாழ்க்கைகளைப் பற்றிக் கதை எழுதத் தயங்கிப் பிராமணத் தமிழில் பிராமணக் குடும்பங்களைப் பற்றிய கதைகளை எழுதினார்கள்!

அதெல்லாம் ஒரு காலம். அந்தக் காலம் போய் தமிழ்நாட்டு இலக்கிய உலகத்தில் சாதிப் பிரச்னை ஒருவாறு தொலைந்தது. எந்தச் சாதியாரையும் பற்றிப் பயமில்லாமல் கதை எழுதலாம் என்ற நிலைமை ஏற்பட்டது. இந்தச் சமயத்தில் நவயுக மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் தோன்றினார்கள். ருஷியக் கதைகளையும் மற்ற மேனாட்டுக் கதைகளையும் படித்தார்கள். அந்தக் கதைகளைப் போல் இந்த நாட்டு ஏழை எளியவர்களையும் உழைப்பாளி மக்களையும் பற்றிக் கதை எழுதத் தொடங்கினார்கள்.

ஆனால், எவ்வளவுதான் அநுதாபத்துடனும் இலக்கியப் பண்புடனும் எழுதினாலும் அந்தக் கதைகள் கதை என்ற முறையில் நன்றாயிருக்குமே தவிர, அவற்றில் உண்மை ஒளி தோன்றுவதில்லை.

பாடுபட்டு அறியாதவன் பாட்டாளியின் துயரத்தைப் பற்றியும், சேற்றில் இறங்கி அறியாதவன் குடியானவனுடைய கஷ்டத்தைப் பற்றியும் என்னதான் கண்ணீரில் பேனாவைத் தோய்த்துக் கொண்டு எழுதினாலும், அந்தக் கதைகளில் மற்ற எல்லாச் சிறுகதை இலட்சணங்களும் இருக்கலாம்; உள்ளத்தை ஊடுருவித் தைக்கும்படியான இதயம் ஒன்றிய ஈடுபாடு இருப்பதில்லை.

அப்படிப்பட்ட உண்மை ஒளி வீசும் சிறுகதைகளை எழுதுவதற்கு ஏழை எளியவர்களிடையேயிருந்தும் உழைப்பாளி மக்களிடையேயிருந்தும் ஆசிரியர்கள் தோன்ற வேண்டும்; அவர்களுடைய எழுத்தில் இலக்கியப் பண்பும் பொருந்தியிருக்க வேண்டும்.

- 'படித்தேன்... ரசித்தேன்...' நூலிலிருந்து...



ஓ

பக்கங்கள்

# கோடிகளில் மான்யம்; சீரோ அக்கறை!

அடுத்தடுத்து பதினெட்டே நாட்களுக்குள் ஐந்து செய்திகள்:

1.அக்டோபர் 17: விவசாயத்தைக் காப்பாற்றுவதற்காக நொய்யல் ஆறு மாசுபடாமல் தடுக்க, திருப்பூர் சாயப்பட்டறைக் கழிவுகளைச் சுத்தப்படுத்தி சீரோ டிஸ்சார்ஜ் அடிப்படையிலான கழிவு சுத்திகரிப்பு நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு தமிழக அரசு மான்யமான ரூபாய் 150 கோடிகளை துணை முதல்வர் மு.க.ஸ்டாலின் திருப்பூர் தொழிலதிபர்களுக்கு வழங்கினார். மொத்தம் 320 கோடி ரூபாய் மான்யத்தை மத்திய, மாநில அரசுகள் வழங்குகின்றன.

2.அக்டோபர் 23 : நொய்யல் ஆற்று நீர் சாயப்பட்டறைக் கழிவுகளால் கடுமையாக மாசுபட்டிருக்கிறதா என்று தண்ணீர் சாம்பிளை எடுத்து ஒரு வாரத்துக்குள் சோதித்துத் தெரிவிக்கும்படி சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகள் உத்தரவிட்டனர்.

3.நவம்பர் 2: நொய்யல் ஆற்று நீர் சாம்பிள்கள் கடும் மாசுடன் இருப்பதாகவும், குடிக்க லாயக்கற்றது என்றும் சோதனை முடிவில் கூறப்பட்டிருப்பதற்குப் பதில் தெரிவிக்கும்படி மாநில மாசுக் கட்டுப்பாடு வாரியத்துக்கு நீதிபதிகள் உத்தரவிட்டனர். இதுவரை எத்தனை சாயப்பட்டறைகள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று விவரங்களும் கேட்டுள்ளனர்.

4. நவம்பர் 3: திருப்பூர் அருகே ஒரு சாயப்பட்டறையில் சாயக் கழிவுத் தொட்டியைச் சுத்தப்படுத்த இறங்கிய நான்கு தொழிலாளர்கள் கழிவிலிருந்து வந்த விஷ வாயுவினால் மூச்சுத் திணறி இறந்தனர்.

5. நவம்பர் 4: மேற்படி சாயப்பட்டறையை மூடும்படி அரசு அதிகாரிகள் உத்தரவிட்டனர். கழிவுகளை அகற்ற இயந்திரம் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற விதிக்கு மாறாக மனிதர்களைத் தொட்டியில் இறக்கியதாகவும் சீரோ டிஸ்சார்ஜ் நிலையத்தைப்



ஞாநி



ட்டறை பயன்படுத்தவே இல்லை என்றும் அதிகாரிகள் கூறியுள்ளனர்.

மக்கள் வரிப்பணமான 320 கோடி ரூபாய் மான்யத்தை விழுங்கியிருக்கும் சீரோ டிஸ்சார்ஜ் நிலையங்களை, மேற்கண்ட சாயப்பட்டறை மட்டுமல்ல, திருப்பூரில் இருக்கும் பல சாயப்பட்டறைகள் பயன்படுத்துவதே இல்லை. ஜனவரி 6ந்தேதி முதல் சாயக்கழிவுகளைச் சுத்திகரிக்காமல் சூழலில் கலக்கவிடக் கூடாது என்ற உச்ச நீதிமன்றத் தடை உத்தரவு அமலுக்கு வந்தது. அதன் பிறகு 177 சாயப்பட்டறைகள் விதி மீறலுக்காக மூடப்பட்டன. இதில் 139 பட்டறைகள் சீரோ டிஸ்சார்ஜ் நிலையத்தைப் பயன்படுத்துகிறோம் என்று பொய் சொல்லியிருக்கின்றன. இது அரசின் அதிகாரபூர்வமான தகவல்.

ஒரு பக்கம் சீரோ டிஸ்சார்ஜ் தொழில்நுட்பம் அமைப்பதற்காக 320 கோடி ரூபாய் மான்யம் வாங்கிக் கொண்டு இன்னொரு பக்கம் அதைப் பயன்படுத்தாமல் தொழிலாளர்கள் உயிரைப் பறிக்கும் நடைமுறையையே பின்பற்றும் கொடூரம். உச்சநீதி மன்றம் உத்தரவிட்டதால்தான் சீரோ டிஸ்சார்ஜ் கண்துடைப்புக்கே வந்தார்கள்.

அதே உச்ச நீதிமன்றம் இன்னொன்றையும் சொல்லியிருக்கிறது: யார் சூழலை மாசுபடுத்துகிறார்களோ அவர்கள்தான் சூழலுக்கு ஏற்பட்ட பாதிப்பைச் சரி செய்வதற்கான செலவையும் கொடுக்க வேண்டும் 'பொல்யூட்டர் பேஸ் பிரின்சிபிள்' என்ற இந்தக் கோட்பாட்டை, 1996லேயே உச்ச நீதிமன்றம் விதித்தது. இந்தியன் கவுன்சில் ஃபார் என்விரொ-லீகல் ஆக்ஷன் அமைப்பு தொடுத்த வழக்கில் அறிவித்தது. எனவே பொதுமக்கள் பணத்தை இதற்கு எடுத்துப் பயன்படுத்துவது உச்ச நீதிமன்றத் தீர்ப்புக்கு முரணானது. அப்படிக் கொடுத்த பணத்தில் ஏற்படுத்திய வசதியையும் பயன்படுத்தாமல் நூற்றுக்கணக்கான பட்டறைகள் இயங்கி வருகின்றன என்பது எவ்வளவு பெரிய கொடுமை.

சாயப்பட்டறைக் கழிவுகளுக்குத் தீர்வாக இப்போது இன்னொரு திட்டம் அரசு செலவில் முன்வைக்கப்படுகிறது. மத்திய அரசு 200 கோடி ரூபாய் தருவதாக ஒப்புக் கொண்டிருக்கிறது. மொத்த செலவு 600 கோடி.

சாயப்பட்டறைக் கழிவுகளைச் சுத்திகரித்து பின்னர் அதைத் தரைக்கடியில் குழாய் வழியே வங்காள விரிகுடாவுக்குக் கொண்டு போய் விடுவதுதான் திட்டம். திருப்பூர், கரூரிலிருந்து கடலுக்குச் செல்வதென்றால் குறைந்தபட்சம் 250லிருந்து 300 கிலோமீட்டர் தூரம் குழாய் போடவேண்டும்.

இந்த மாதிரி கழிவுகளைக் கடலில் விடுவது சரியானதா என்பதைப் பார்ப்பதற்கு முன்பு, இந்தியாவில் வேறெங்காவது அப்படிச் செய்கிறார்களா என்று பார்ப்போம். குஜராத்தில் கடந்த









பதினொரு வருடங்களாக அப்படிச் செய் கிறார்கள்.

தென் குஜராத்தில் சர்காம் நகரத்தில் குஜராத் ஆரசின் ரசாயனத் தொழிற்பேட்டை இருக்கிறது. அங்கிருந்து கழிவுகள் 14 கிலோ மீட்டர் தூரத்துக்கு இரண்டடி விட்டமுள்ள குழாய் வழியே கடலுக்கு எடுத்துச் சென்று கொட்டப்படுகிறது. தினசரி 12 மில்லியன் லிட்டர் கழிவு.வழியில் தட்காம், சரோண்டா, நர்கோல், மரோலி ஆகிய கிராமங்கள் இருக் கின்றன.

நிலத்தடியில் பதிக்கப்பட்டுள்ள குழாய் வழி, நெடுக ஆங்காங்கே ஒழுகுகிறது. அத னால் நிலத்தடி நீர் மாசாகி நான்கு கிராமங் களிலும் விவசாயமும் குடிநீரும் பாதிக்கப் பட்டுவிட்டது. அடி பம்பில் தண்ணீர் சிவப்பாக வருகிறது. அரிசியையும் பருப்பை யும் அந்தத் தண்ணீரில் வேகவைப்பது மிகக் கடினம். தண்ணீரிலேயே ரசாயன வாடை வருகிறது. தட்காம் கிராமக் கடற்கரையில் கழிவுகள் குழாயில் வந்து விழும் இடத்தருகே கொஞ்ச நேரம் நின்றாலே குமட்டலும் மூச்சுத் திணறலும் ஏற்படுவதாகப் பத்திரிகை யாளர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

நான்கு கிராமங்களிலும் மக்கள் தொகை யில் 60 சதவிகிதம் பேர் தோல் நோய்கள், நுரையீரல் பிரச்னை, ஜீரணக் கோளாறு களுடன் அவதிப்படுகிறார்கள் என்று அந்த வட்டார மருத்துவர்கள் தெரிவிக்கிறார் கள்.

கடலில் மீன் வளம் கடுமையாகப் பாதிக் கப்பட்டிருக்கிறது. வாப்பி தொழிற்பேட்டை யின் கழிவுகளால் டாமன் டையூ கடற்பகுதி மீன்வளம் 65 சதவிகிதம் குறைந்துவிட்டதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தட்காம் கடற் பகுதியும் அருகிலேயே உள்ளது. மீன்வளம் பாதிக்கப்பட்டுவிட்டதால் வருடத்தில் நான்கு மாதங்களில் மட்டுமே மீன் கிடைக்கிறது.

குஜராத் மாநில மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் நிர்ணயித்த விதிகள் எதுவும் பின்பற் றப்படவில்லை. பல இடங்களில் குழாயைத் தாங்கியிருக்கவேண்டிய சிமெண்ட் உடைந்து விட்டது. கடலுக்குள் செல்லும் குழாயே முழுத்தொலைவும் செல்லாமல் பாதியில் உடைந்து, அதன் ஃபில்டர்கள் பழுதாகிவிட் டன.

இத்தனை சீர்கேடுகளைப் பற்றியும் வாரி யம் பொருட்படுத்தவில்லை, எனவே தட் காமில் உள்ள ஒரு குடியிருப்போர் சங்கமும் நான்கு கிராமங்களின் பஞ்சாயத்து தலை வர்களும் குஜராத் உயர் நீதி மன்றத்தில் சென்ற வருடம் வழக்குத் தொடுத்தனர். கழி வுகள் குழாய் வழியே அனுப்பப்படும் விதத்தைக் கண்காணிக்க, அதற்கென அமைக்கப்பட்ட நிறுவனம் தவறிவிட்ட தாக அதன் வக்கீல் கோர்ட்டிலேயே ஒப்புக் கொண்டார்.

விதிகளின்படி கழிவின் அளவு கடல் நீரில் எந்த விகிதத்தில் இருக்க வேண்டுமென் றால், ஒரு மீன் அதில் 90 நாட்கள் வரை உயிர் வாழ முடியவேண்டும். தட்காம் கழிவைச் சோதனைக்கு அனுப்பியதில் ஒரு

**இந்த வார பூச்செண்டு!**

சென்னைத் தொழிலதிபர் மகன் கடத்தலில் வீரத்தைவிட விவேகம் முக் கியம் என்று செயல்பட்டு மகனையும், பிணைத் தொகையையும் மீட்ட சென்னை நகர போலிசாருக்கு இ.வா.பூ.

## இந்த வாரக் கேள்வி!

"தலைமைப் பொறுப்பிலே உள்ள அதிகாரிகள் இரண்டு பேரில் ஒரு பெண் மணி தலைமைச் செயலாளராகவும் இன் னொரு பெண்மணி காவல் துறைக்குத் தலைமை இயக்குனராகவும் இருப்பதை எண்ணி எண்ணி நாமெல்லாம் மகிழலாம். மகிழ முடியாதவர்கள் வேண்டுமானால் கோர்ட்டுக்குச் செல்வார்கள்..."

லத்திகா சரணை காவல் துறைத் தலை வர் பதவிக்கு நியமித்ததை எதிர்த்து நட்ராஜ் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்ததைத்தான் கருணாநிதி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

கருணாநிதியின் அபத்தமான வாதத் தின் அடிப்படையில் ஒரு கேள்வி. ஜெய லலிதா ஒரு பெண் என்பதாலும் ஒரு பெண் முதலமைச்சராகக் கூடாது என்பதற்காகவும் தான் அவர் ஜெயலலிதாவை எதிர்த்து அர சியல் செய்கிறார் என்று நாம் சொல்லலாமா?

மீன் அதில் ஒரு மணி நேரம்கூட உயிருடன் இருக்க முடியாது என்பது தெரியவந்தது. கட லுக்குள் செல்லும் குழாய் இரண்டு கிலோ மீட்டர் வரை உள்ளே செல்ல வேண்டும், நிலத்தில் குழாய் ஆறடிக்குக் கீழே புதைக் கப்படவேண்டும் என்ற விதிகளும் பின் பற்றப்படவில்லை. கடலுக்குள் செல்லும் குழாய் உடைந்து 6 வரு டங்களாகிவிட்டன. இப்போது புதுக் குழாயைத் தினசரி 24 மில்லி யன் லிட்டர் கழிவு கொண்டு செல்ல வச தியாக அமைக்கலாமா என்று அதிகாரிகள் யோசித்து வருகிறார்கள்.

குஜராத்தில் நடக்கும் நரேந்திர மோடி யின் ஆட்சியில் ஊழல் இல்லை, திறமையான நிர்வாகம் நடக்கிறது என்றெல்லாம் சொல் லப் படுகிறது. மோடியின் மதவாதக் கொள் கைகளை விமர்சிக்கிறவர்கள் கூட சமயங் களில் அங்கே ஊழல் குறைவு என்று சொல் கிறார்கள்.

அங்கேயே இந்த நிலை. தமிழ்நாட்டில் ஒரு லாரி மணல் எடுக்க அனுமதித்தால் ஆறு லாரி அள்ளுவதற்கான லஞ்சப்பணத்தைக் குடும்பத்தில் ஒருவருக்கான வருவாயாக ஒதுக்கித் தரும் அளவுக்கு ஊழல் ஆட்சிகள் தான் நம் தொடர்ந்த அனுபவம். திருப் பூரில் தொழிலதிபர்களிடமிருந்து வசூலித்து அமைச்சரிடம் பணம் தருவதுதான் எம்.எல்.ஏ.வின் மக்கள் பணி என்று ஏற்கெனவே குற்றம்சாட்டப்பட்டிருக் கிறது.

நொய்யல் போன்ற அசல் பிரச்னை களை விட்டுவிட்டு அக்கப்போர் அரசியல் ரிப்போர்ட்டிங்கில்தான் நம் மீடியாவும் இருக் கிறது. திருப்பூர் கரூர் சாயப்பட்டறைகள் பற்றி விமர்சித்தால் உடனே அவை கோடிக்க ணக்கில் அந்நியச் செலாவணி சம்பாதிப்பதைத் தான் சமாதானமாகச் சொல்கிறார்கள். நம் ஆற் றையும் நம் விவசாயத்தையும் கெடுத்து விட்டு எதற்காக அந்த அந்நியச் செலாவணி என்ற கேள்விக்குப் பதில் வராது.

## இந்த வாரத் திட்டு!

ஸ்பெக்ட்ரம் முறைகேடு தொடர்பாக, தணிக்கை அதிகாரி, உச்சநீதி மன்றம் ஆகி யோர் கண்டித்த பிறகும், விசாரணை முடி யும் வரை விலகியிருக்க முன்வராமல், மந்திரி பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கும் ஆ.ராசா வுக்கு இ.வா.தி.



நம்மிடமிருந்து இறக்கு மதி செய்யும் அமெரிக்கா வும் மேலை நாடுகளும் ஏன் அவர்கள் நாட்டில் இந்தச் சாயக் கழிவு, தோல் பதனிடும் கழிவுத் தொழிலை அனு மதிக்கவில்லை என்று யோசிக்க வேண்டும். அவர்களுடைய சூழலைக் காப்பாற்றி நம் முடையதைக் கெடுத்துக் கொண்டு அந் நியச் செலாவணி யாருக்காகச் சம்பாதிக் கிறோம்?

நேர்மையான பதில்களைத் தேடுவோமா?



# ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

**எஸ்.ஆர்.ஜெயாச்சார், கோவை**

***பிறந்த தேதி, நேரம் சரியாகத் தெரியவில்லை. எப்படி ஜோசியம் பார்ப்பது?***

கைரேகை மூலம் எதிர்காலத்தை அறிந்து கொள்ளலாம். ஒரு மனிதனின் ரேகை போல் இன்னொரு மனிதனுக்கு இருப்பதில்லை. இறைவன் படைப்பில் இது ஒரு மிகப் பெரிய அதிசயம். கைரேகை ஜோதிட முறை இந்தியாவில் சில பகுதிகளில் மட்டுமே பிரபலமாக உள்ளது. கொல்கத்தாவில் உள்ள மிகப் பழைமையான நூலகத்தில் கைரேகைக் கலை தொடர்பான ஓலைச்சுவடிகளும் நூல்களும் ஏராளமாக உள்ளன. வங்காளியினர் இக்கலையில் வல்லுநர்களாகத் திகழ்கின்றனர்.

**அ. சண்முகசுந்தரம், பெங்களூரு - 72**

***10.10.2010 அன்று காலை 10.10க்குப் பிறந்த குழந்தையின் ஜாதகம், எதிர்காலம் எப்படி இருக்கும்?***

தொலைபேசிகளுக்கோ அல்லது வாகனங்களுக்கோ இப்படி ஃபேன்சி எண் வாங்க வேண்டுமானால் அதிக செலவாகும். எந்தக் கூடுதல் செலவுமின்றி இப்படி ஒரு தேதியை இலவசமாக இறைவன்



# ரெட்டைச் சுழிக்கு

அளித்துள்ளான். மற்றபடி எந்தச் சிறப்பும் இல்லை. விசாகம் நட்சத்திரம், துலாம் ராசி, விருச்சிக லக்னம் கொண்ட இக்குழந்தையின் எதிர்காலம் நன்றாக உள்ளது.

**எஸ்.அசோக்குமார், திருப்பூர்-4**

***நான் 18.5.1954 அன்று பிறந்தேன். எனது ஜாதகம் இணைத்துள்ளேன். எனக்கு வரவிருக்கும் சந்திர தசை எப்படி இருக்கும்?***

விருச்சிக லக்னம் விருச்சிக ராசியில் பிறந்த தங்களுக்குச் சந்திர தசை யோகமான காலம். தற்போது நடைபெறும் சூரிய தசையை விடப் பன்மடங்கு நன்றாக இருக்கும்.

**சரா.எ.முரளி, கள்ளக்குறிச்சி**

***எனக்கு வயது 25. ஜாதகம் அனுப்பியுள்ளேன். திருமணம் பற்றியும் எழுத்தாளராக முடியுமா என்பது பற்றியும் தெரிவிக்கவும்?***

திருமணக் காலம் அருகில் வந்துவிட்டது. ஒருசில மாதங்களுக்குள் கெட்டிமேளம் கொட்டப் போகிறது. பெண் சொந்தத்தில் இல்லை. எழுத்தாளராகிப் புகழ் பெறுவதும் சாத்தியமே. இணையதள இதழ் தொடங்குங்கள்.

**ப.த.மணி, திருநெல்வேலி-7**

***ராகு காலம் என்றால் என்ன? ஏன் அந்த நேரத்தில் திருமணம் செய்யக் கூடாது? செய்தால் என்னவாகும்?***

ஒவ்வொரு கிழமையிலும் சூரிய உதயத்திலிருந்து குறிப்பிட்ட நாழிகைகளில் சுப விசேஷங்கள் செய்யக் கூடாது என்று பெரியவர்கள் வழிவழியாகச் சொல்லி வந்ததை நாங்கள் அப்படியே பின்பற்றி வருகிறோம். ராகு காலம் - எம கண்டம் ஆகிய இரண்டும் முக்கியமான சுப விசேஷங்கள் செய்வதற்கு உகந்த காலம் அல்ல. 'ஏழரை நாழிகை தவிர்த்திடுக' என்று ஆன்றோர் சொல்லி வருகின்றனர். அதாவது ராகு காலம் 3¾ நாழிகை. எம கண்டம் 3¾ நாழிகை. திருமாலின் அவதாரங்களான ராமனும் கண்ணனும்கூட, நல்ல நேரம்

பார்த்து சுப முகூர்த்தத்தில் சில முக்கியமான செயல்களைச் செய்ததை ராமாயணமும் மகாபாரதமும் எடுத்துரைக்கின்றன. எங்களுக்கு அதிக நம்பிக்கை இருக்கிறது. ஆகவே பின்பற்றுகிறோம். நம்பிக்கை என்பது தாமாக வருவது. வற்புறுத்தலினால் வருவது அல்ல. ராகு காலம் - எமகண்டம் தீமையான காலம் என்பது ஒரு நம்பிக்கை, அவ்வளவு தான்.

**ஏ.கே.சரவணன், கும்பகோணம்**

***தலையில் இரண்டு சுழி இருந்தால், இரண்டு தாரம் என்கிறார்களே... உண்மையா?***

இல்லை. இது வெறும் கற்பனை. மிஸ்டர் சரவணன், உங்க தலையில் எத்தனை சுழி என்பதைச் சொல்லவே இல்லையே!

**திருமதி தபோல்விட்டல், பூனா**

***எனது மகன்கள் தேஜஸ், துஷார் ஆகியோரின் ஜாதகங்களை அனுப்பியுள்ளேன். 27.3.83 அன்று காலை 4.45க்கு மும்பையில் பிறந்த தேஜஸின் தொழில் பற்றியும் 12.9.87 காலை 9.08க்கு மும்பையில் பிறந்த துஷாருக்கு உயர் கல்வி பற்றியும் தெரிவிக்கவும்.***

தேஜஸ்: பூரம் நட்சத்திரம் சிம்ம ராசி, கும்ப லக்னம், 2013 வரை சந்திர தசை உள்ளது. அதன் பிறகு அவர் சொந்தத் தொழில் செய்து மிக உயர்ந்த நிலைக்கு வருவார். ஆடை, அணிகலன்கள், பொன், வெள்ளி, வைரம், நவமணிகள் போன்றவற்றை வாணிபம் செய்வார். துஷார்: பரணி நட்சத்திரம், மேஷ ராசி, துல்ாம் லக்னம். அவருக்கும் சந்திர தசை புதன் புக்தி நடைபெறுகிறது. இளையவர் அரசாங்க உயர் அதிகாரியாகப் பணிபுரிவார். ஐ.ஏ.எஸ் அல்லது ஐ.எஃப்.எஸ் படிக்கலாம். வெளியுறவுத் துறையில் பணியாற்றும் வாய்ப்பு பலமாகக் காணப்படுகிறது.

# ரெண்டு தாரமா?

உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# நான் ஒரு நக்சலைட்!

**- தாமரை**

"ஆலை அரசுகள் சோலை மிராசுகள்
பாலில் மிதந்தது போதும் - இங்கு
வேலை இழந்தவர் வீதி முனைகளில்
கூழுக்கலைவதைப் பாரும் - அவர்
கூட்டத்தை ஓரணி சேரும்..."

இவை 1968 - 69 வாக்கில் கவியரசு கண்ணதாசன் எழுதிய கவிதை வரிகள். அவர் நடத்திய 'கண்ணதாசன்' என்ற இலக்கிய இதழில் வெளிவந்தது. இந்தக் கவிதைக்கு அவர் கொடுத்த தலைப்பு: நான் ஒரு நக்சலைட்!

கண்ணதாசன் இப்படி எழுதிய நேரத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராக இருந்தார். யாரும் இந்தக் கவிதைக்காக அவரைக் கைது செய்யச் சொல்லவில்லை.

கண்ணதாசன் வெளிப்படுத்தியது சமூக அவலங்கள் மீதான ஒரு சீற்ற உணர்வு. இந்த உணர்வை அவர் கவிதையாக வெளிப்படுத்தினார். செயலாகவே சில இளைஞர்கள் வெளிப்படுத்தும்போது அவர்களை நக்சலைட்டுகள், பயங்கரவாதிகள், தீவிரவாதிகள் என்றெல்லாம் பெயரிட்டு அழைக்கின்றனர். அவர்களைப் பிடிப்பதற்காகக் காடுகளில் தேடுதல் வேட்டை நடக்கிறது. இது உருவத்தை விட்டுவிட்டு அதன் பிம்பத்தைத் தேடுவதாகும். சமூக அவலங்கள் இருக்கும் வரை, அரசே அந்த அவலங்களுக்குக் காரணமாக இருக்கும் வரை அவற்றுக்கெதிரான உணர்வுகளையும் அந்த உணர்வுகளின் வெளிப்பாடான இயக்கங்களையும் ஒழித்துவிட முடியாது.

கண்ணதாசன் காலத்தைவிட நம் காலத்தில் சமூக அவலங்கள் பன்மடங்கு பெருகி உள்ளன. சென்னை நகரை உழைப்பால் உருவாக்கிய குடிசைவாசிகளைக் குப்பை லாரியில் ஏற்றி ஊருக்கு வெளியே கொண்டு போய்க் கொட்டிவிட்டு ஊரை அழகுபடுத்தவும் பணக்காரர்களுக்கான புதிய கட்டடங்களைக் கட்டவும் செயல்படுகிறது அரசு. விமான ஓடுபாதையை விரிவாக்குவதற்காக விளைநிலங்களைப் பறிக்க வரிந்து கட்டி நிற்கிறது. சிறப்புப் பொருளியல் மண்டலங்கள் என்று சொல்லி, பன்னாட்டு நிறுவனங்களுக்குப் பாத சேவை செய்கிறது. தொழில் வளர்ச்சியாம்!

உழைப்பாளர்களைத் தேவையற்றவர்களாக்கித் துப்பிவிடும் புதிய தொழில்நுட்பத்தின் துணையோடு பளபளக்கும் புதிய தொழில்கள் - நூறு பேருக்கு வேலைதர ஆயிரம் கோடி முதலீடு தேவைப்படும் தொழில்கள் - முளைத்து விடுகின்



றன. சைக்கிள் தொழிற்சாலைகள் மூடப்பட்டு கார் தொழிற்சாலைகள் திறக்கப்படுவது, இன்றைய தொழில் வளர்ச்சி யாருக்காக என்பதைப் புலப்படுத்தும்.

இப்படியே போனால் எங்கே போவான் ஏழை? ஒரு சாதாரணன் நியாயமாக உழைத்து முன்னேற முடியாத சூழ்நிலையை அரசு உருவாக்கி விட்டது. ஒரு துண்டு நிலம் வாங்குவது எட்டாக் கனவாகிவிட்டது. உணவுப்பொருட்கள் விலையேற்றம், விண்ணை முட்டும் வீட்டு வாடகை, கல்விக் கட்டணக் கொள்ளை, மருத்துவமனைக் கட்டணங்கள், போக்குவரத்துக் கட்டண நிலவரம்... எப்படித்தான் அன்றாட வாழ்க்கையை ஓட்டுவது?

இது பணக்காரர்களுக்கான இடமாகி விட்டதால்,

> அநீதி கண்டு கொதிக்கும் நாமெல்லாரும் மனத்துக்குள் நக்சலைட்டுகளே!





அரசு இதன் மூலம் சாதாரணர்களுக்குக் கொடுக்கும் செய்தி, 'எப்பாடு பட்டாவது பணக்காரனாகிவிடு' என்பதுதான்.

விளைவு...? குழந்தை கடத்தல், வீடு புகுந்து கொலை, கொள்ளை, வழிப்பறி, இன்னும் நினைத்துப் பார்க்க முடியாத கொடூரங்கள்...

கோடிக்கணக்கானவர்கள் வெறும் வயிற்றுடன் தூங்கச் செல்லும்போது, ஒரு சிறு கூட்டம் உயர்ரக உணவு விடுதிகளில் விடியும் வரை குடித்துக் கும்மாளமடிப்பதைப் பார்க்கிறவனுக்கு ஆத்திரம் வராதா?

ஒரு தொழிலதிபர் தம் குடும்பத்துக்காக ஏழு மாடிக் கட்டடம் கட்டியுள்ளார். ஒரு சிறைக் கொட்டடியின் நீள அகலம் கூட இல்லாத குடிசை வீடுகளில் வாழும் மக்கள் இந்தச் செய்தியைப் படித்தால் என்ன உணர்வைப் பெறுவார்கள்?

நம்நாடு உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடாம். தன்னலமற்ற ஒரு நல்ல தொண்டன்/அறிவாளி தேர்தலில் போட்டியிட்டு சட்டமன்றத்துக்கோ, நாடாளுமன்றத்துக்கோ போய்விட முடியுமா? எந்தக் கட்சியாவது அவரை வேட்பாளராக நிறுத்துமா? தேர்தல்களில் 'வோட்டு வழி இருக்க, வேட்டு வழி எதற்கு?' என்று நக்சலைட்டுகளைப் பார்த்து எப்படிக் கேட்பீர்கள்?

எங்கெங்கு நோக்கினும் லஞ்சமும் ஊழலும் கமிஷனும் கையாடலும்... நூறும் ஆயிரமும் வாங்கும் ஊழலாவது சில நேரம் பிடிபடுகிறது. 'ஆயிரம் கோடி' ஊழல்கள் கட்சிகளுக்கு கௌரவச் சின்னங்களாகிவிட்டன. இதையெல்லாம் கண்டு கொள்ளாதிருப்பதுதான் கூட்டாளி தர்மமாம்!

யாரோ என்னவோ செய்யட்டும், எனக்கு வேண்டியது கிடைத்தால் போதும் என்ற மனநிலை நடுத்தர வர்க்கத்திடம் தலைதூக்கி நிற்கிறது.

வன்முறை அரசியல் வளர்வதற்கு இவையெல்லாம்தான் மூலகாரணங்கள்!

அண்மையில் கோவையில் நடந்த குழந்தைகள் கடத்தலும் கொலைகளும் நம்மை உறைய வைத்தன. மனித உருவில் மிருகங்களாக வந்த அந்த இரு கொடியவர்கள் மீதும் நியாயமாக ஆத்திரப்பட்டோம். அவர்களை உடனே தூக்கிலிட வேண்டும் என்ற அட்டைகளைத் தூக்கிப் பிடித்தவண்ணம் ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டார்கள்.

நேருக்கு நேர் அப்பட்டமாகத் தெரிந்த கொடுமைகளைச் செய்தவர்கள் மீதான கோபம் நியாயம் என்றால், கண்ணுக்குத் தெரியாத பெரிய கொடுமைகளைச் செய்து கொண்டிருப்பவர்கள் மீது வரும் கோபத்தை மட்டும் ஏன் குற்றமாகக் கருத வேண்டும்?

வன்முறை கூடாதுதான்! ஆனால் வன்முறையை விதைக்கும் சமூகச் சூழலை மாற்றாமல் வன்முறையை மட்டும் ஒழித்துவிட முடியாது.

அநீதி கண்டு கொதிக்கும் நாமெல்லாரும் மனத்துக்குள் நக்சலைட்டுகளே!

## பாலிடிக்ஸ் பஜார்



### விளையாட்டா? வில்லங்கமா?

மதுரையில் அழகிரியின் மகன் துரை தயாநிதி தலைமையில் ராயல் கிரிக்கெட் அணி என்று ஓர் அணி இயங்குகிறது. எந்தப் போட்டியிலும் ராயல் தான் ஜெயிக்க வேண்டுமாம். சமீபத்தில் வேறொரு அணி ஜெயிக்க, மிக அடக்கமாக அந்தக் குழுவினர், 'இந்த வெற்றியை மத்திய அமைச்சருக்குக் காணிக்கை யாக்குவதாக'க் குறிப்பிட்டுள்ளனர். உடனே ''இதைச் செய்யும் நீங்கள் முதலிலேயே விட்டுக் கொடுத்திருந் தால் ராயல் அணி ஜெயித்திருக்குமே'' என்று பதில் வந்ததாம்.

(அட விளையாட்டில்கூடவா வில்லங்கம்!?)

### வாட்டுது வடசென்னை!

வட சென்னையில் அ.தி.மு.க.வுக்கு நல்ல களப் பணியாளராக இருந்தவர் சட்டமன்ற உறுப்பினர் பி.கே.சேகர்பாபு. இவரையும், வடசென்னைப் பகுதியில் உள்ள பல பகுதிச் செயலாளர்களையும் சமீபத்தில் பதவியிலிருந்து நீக்கிவிட்டார் ஜெயலலிதா. இவர்களைப் பிடிக்க தி.மு.க. வலை வீசி இருக்கிறது. மீன்கள் சிக்கக் கூடும். அ.தி.மு.க. மாவட்டச் செயலாளர்கள் கூட்டத் தில் ஜெயலலிதா, ''மண் ணெண்ணெய், மசல் விற்றுக் கொண்டிருந்த சேகர்பாபு, தி.மு.க. வுடன் தொடர்பு வைத் துக் கொண்டு கோடிக்கணக்கில் சேர்த்துவிட்டார்'' என்று குற்றப்பத்திரிகை வாசித்தாராம்! ''தேர்தல் சமயத்தில் சேகர்பாபுவை நீக்கியது சாணக்கியமான செயலாகத் தெரியவில்லை'' என்பது சில கட்சிப் பிரமுகர்களின் கருத்து. ''நோ... சரியான சமயத்தில் அம்மா நீக்கிவிட்டார்... இல்லையென்றால் தேர்தல் சமயத்தில் கட்சித் தாவி சங்கடத்தில் தள்ள இட்டம் போட்டிருந்தார் அவர்'' என்கிறார் மற்றொரு பிரமுகர்.

### கருத்துக் கணிப்பு - இருட்டடிப்பு!

இலயோலா கல்லூரி ஊடகத் துறை மாணவர்கள் சமீபத்தில் மக்களின் ஆத ரவு யாருக்கு என்பது குறித்து எடுத்த கருத்துக் கணிப்பு முடிவுகள் வெளி யிடப்படாமல் நிறுத்தப்பட்டதாகச் சொல்லிக்கொள்கிறார்கள். மக்களி டையே தி.மு.க. அணிக்கு 28 சதவிகிதம் ஆதரவும், அ.தி.மு.க. அணிக்கு 38 சத விகிதம் ஆதரவும், தே.மு.தி.க.வுக்கு 8 சதவிகிதம் ஆதரவும் இருப்பதாகச் சொல்கிறதாம் அந்தக் கணிப்பு. இந்தக் கணிப்பு வெளிவந்தால் தி.மு.க.வுக்கு இன்னமும் பாதகமான சூழல் உருவாகும் என்று கல்லூரிக்கு நெருக்கமான தி.மு.க. பிரமுகர்கள் அழுத்தம் கொடுக்க, முடிவு வெளியிடப்படுவது நிறுத்தப்பட்டதாம்.



அ.தி.மு.க. அணி பிரசாரத்தில் இன் னமும் விறுவிறுப்பு கூட்டுவதற்காக டி.ராஜேந்தர், நடிகர் கார்த்திக் (தனிக் கட்சி தொடங்கினாரே!) ஆகி

# சிதம்பர ரகசியம்!



பீகார் தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு தமிழகத்தைக் குறித்த ஒரு முடிவை எடுக்கலாம் என்பது காங்கிரஸ் தலைமையின் கருத்தாக இருக்கிறது. இருந்தும் இந்த விவகாரத்தில் ப.சி தம்பரத்தின் யோசனைக்கு முக்கியத் துவம் கொடுக்கிறதாம் தலைமை. ''நீங்கள் தி.மு.க.வா, அ.தி.மு.க.வா என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள். ஆனால் தி.மு.க.வுடன் கூட்டு என்றால் சரிபாதி இடங்களை வாங்கி ஆட்சியில் முக்கியப் பங்கு கொடுக்க வேண்டும் என்று சொல்லிவிடுங்கள். அ.தி.மு.க. தலைமை என்றால் 75 இடங்கள் கேட்க வேண்டும். அரசுக்கு எதிரான மனோ நிலை மக்களிடையே இருப்பதால் அ.தி.மு.க. கூட்டு இருந்தால் போட்டி யிடும் இடங்களில் என்பது சதவிகிதம் வெற்றி பெறலாம்'' என்று சிதம்பரம் சொல்லி இருக்கிறாராம். காங்கிரஸ் தலைமையில் தே.மு.தி.க., பா.ம.க. என்று அணி அமைத்து, தேர்தலுக்குப் பின்னே அரசியல் ஆட்டத்தை வைத்துக் கொள்ளலாமா? என்ற கருத் தோட்டமும் காங்கிரஸ் தலைமைக்கு இருக்கிறதாம்.



யோரை வளைத்துப் போட்டுவிட்டாராம் ஜெயலலிதா.



## வீரபாண்டி கோட்டையிலே

வீரபாண்டியாரின் தம்பி மகன் சுரேஷ் குமார் கொலைக் குற் றச்சாட்டின் பேரில் கைது செய்யப்பட்ட தைத் தொடர்ந்து வீர பாண்டியாருக்கு எதிராக தி.மு.க.வில் செயல்படும் சில பிர முகர்கள் தங்கள் நட வடிக்கைகளை வேகப் படுத்தி இருக்கிறார்கள். இவர்களுக்குத் தளபதியின் ஆதரவு இருப்பதாகக் கொதித் துப் போயிருக்கிறது வீரபாண்டியார் தரப்பு. ''சில மாதங்களுக்கு முன் அவரது மகன் திருமணத்துக்கு அமைச் சர்கள் சேலம் வருவதைத் தடுக்கும் வகையில் சென்னையில் அன்று அமைச்சர்கள் இருக்க வேண்டும் என்று சர்க்குலர் போடப்பட்டது. நாகர் கோயிலில் நடந்த முப்பெரும் விழாவுக்கு அழகிரியை முறைப்படி அழைக்காதது குறித்தும், விழா விளம்பரத்தில் குஷ்பு பெயரைச் சேர்த்தது குறித்தும் தமது அதிருப்தியை வெளிப்படுத்தியவர் வீரபாண்டியார்'' என்கிறார் அவருக்கு நெருங்கிய பிரமுகர் ஒருவர். விவகாரம் அடங்கிப் போகுமா... வெடித்துக் கிளம்புமா என்பது தேர்தல் நெருங்கும்போது தெரியும்!

- சஞ்சயன்

● லவ் பண்ணுங்க சார், லைஃப் நல்லாயிருக்கும் என்பதுதான் கதையின் கரு. கண்ணாடி வெட்டியதுபோல் திரைக்கதையமைத்துக் காட்சிப்படுத்தியிருக்கிறார்கள். சமீபத்தில் வந்த சினிமாக்களில் அடடா போட வைக்கும் அழகான கதைப் பயணம் 'மைனா.'

● சுருளியாக வரும் விதார்த் ஆத்மார்த்தமான நடிப்பைக் கொடுத்துள்ளார். மைனாவாக அமலாபால், அச்சச்சோ அவ்வளவு அழகு. ஒட்டுமொத்த கதையும் மைனாவைச் சுற்றியே என்பதால் வைத்த கண் மாறாமல் மைனாவையே ரசிக்கிறோம். தம்பி ராமையா, சேது பாத்திரங்கள் 'பளிச்.'

● இதமாய் இருக்கும் இனிப்பைப்போல டி. இமானின் இசை, ஏக்நாத்தின் வரிகளில் நீயும் நானும் பாடல் உயிரை ஆட்டிப் பார்க்கிறது. யுகபாரதியின் வரிகளில் கையப் புடி, கிங்குச்சா, மைனா மைனா பாடல்கள், காட்டுத் தேனை உள்ளங்கையில் ஏந்திய சந்தோஷம்.

● சுகுமாரின் கேமரா மலையழகுகளின் பச்சையத்தை அப்படியே அப்பி எடுத்து, கண்களோடு விளையாட விடுகிறது! இரண்டாம் பாதியில் பஸ் பள்ளத்தாக்கில் விழும் காட்சியைப் படமாக்கியிருப்பது 'வாவ்' சுகுமார்.

● முதல் பாதி கொஞ்சம் அப்படி இப்படி இருந்தாலும், இரண்டாம் பாதி ஆரம்பம் முதல் இறுதிவரை சிக்ஸராக அடிப்பதால் படம் சக்ஸஸ் பார்முலாவை எட்டுகிறது.

● வாழ்த்துகள் என்பதைவிடப் பிரமாதம் பிரபுசாலமன். படம் முடிந்து வெளியேறிய பின் நம் மனத்துக்குள்ளும் எங்கோவொரு மலையடிவாரத்திலும் 'மைனா' சுத்துவது போல் ஓர் உணர்வு.

**- பொள்ளாச்சி ராஜ்குமார்**

தனுஷ், ஜவஹர், விவேக், தமிழ் சினிமாவின் சிறந்த லூசுப் பெண் ஜெனிலியா மற்றும் இருபதுக்கும் மேற்பட்ட தமிழ் சினிமாவின் பிரபல, பிரபலமில்லாத நடிகர் நடிகைகள் என்று குழாமிட்டு வெளிவந்திருக்கும் படம். ஏற்கெனவே தெலுங்கில் ஹிட்டானதால், ஏன் எதற்கு என்று கேள்வி கேட்காமல், சுடச்சுட வாங்கி ரீமேக்காக்கியிருக்கிறார்கள்.

ஜெனிலியாவின் சொத்துக்காக இரண்டு மாமன்களுக்கிடையே லடாய். இரண்டு பேருக்கும் ஒருத்தருக்கு ஒருத்தர் ஆகாது. இருவரையும் சமாளித்து தனுஷ் எப்படி ஜெனிலியாவை அடைகிறார் என்பதுதான் இரண்டேமுக்கால் மணி நேரக் கதை.

முதல் பாதி முழுவதும், தனுஷ், ஜெனிலியா மற்றும் தனுஷ் குடும்பத்தினர் என்று ஒரே பாசக்காரக் குடும்பமாய் போவதால் ஒண்ணும் பெரிசா சொல்றதுக்கில்லை. ஜெனிலியா வீட்டுக்காரங்களோடு விவேக், தனுஷ் சேரும்போதுதான் கலகலப்பு கலர் வருகிறது. விவேக் வழக்கமான வசன காமெடியிலிருந்து மெல்ல ஆக்ஷன் காமெடிக்கு வந்திருக்கிறார். அதிலும் தனுஷ் செய்யும் உட்டாலக்கடி தில்லாலங்கடி வேலையைப் பார்த்து ஃபீல் செய்யும்போதெல்லாம் நெஞ்சம் மறப்பதில்லை மியூசிக் வருகிறது; நிச்சயம் சிரிக்காமல் இருக்க முடியாது.

தனுஷ் குடும்பத்தில் ஒரு கும்பல் என்றால், இந்தப் பக்கம் ஜெனிலியா மாமன் குடும்பத்தில் ஒரு நடிகர் கும்பல்.

டி.வி. சீரியல் கணக்கா லைனா ஆளாளுக்கு வரிசை கட்டி வந்து சீனுக்கு சீன் திருப்பம் தர்றோம்னு காமெடி பண்றாங்க.

விஜய் ஆண்டனி நடிக்கப் போயிட்டதினால பாட்டுப் போடறதில சுரத்தில்லாம இருக்காரு போல... பாலசுப்ரமணியத்தின் ஒளிப்பதிவு பளிச். இது தனுஷ் படம் இல்லை. தனுஷ் இருக்கிற படம்.

உத்தமபுத்திரன் - வெறும் கிச்சுக் கிச்சு!

-கேபிள் சங்கர்

# உத்தமபுத்திரன்

# வானவில் கல்யாணம்!

**போ**ன வாரம் பெயிலில் வந்திருந்த சாமியார் அந்தச் சுவடே இல்லாமல் போஸ்டரில் பளீரென்று சிரித்துக்கொண் டிருந்தார். குரு பூர்ணிமாவுக்கு அருள் பெற்றுக் கொள்ள எல்லோரையும் அழைத் திருந்தார்கள். அனுமதி இலவசம் என்று கொட்டை எழுத்தில் போட்டிருந்தது. யார் மீது கோபப்படுவது என்று தெரியாமல் பொதுவாகக் கோபப்பட்டான் விசாகன்.

விசாகனும் கல்பனாவும் திருச்சியிலி ருந்து இன்று காலைதான் சென்னை வந்தார் கள். இன்று ஜட்ஜ்மெண்ட் டே. பெயில் எடுத்ததில் ஆரம்பித்து ஆறு மாதங்களில் கோர்ட்டுக்கு இது பதினேழாவது விசிட். தத்கல் மூலமாக மம்தா பானர்ஜியின் ரயில்வேக்கு இந்த மிடில் கிளாஸ் குடும்பத் திலிருந்து முப்பதாயிரம் நிகர லாபம். இந்தப் பாழாய்ப்போன, நிஜமாகவே பாழாய்ப்போன கல்யாணத்தால் கோர்ட் வாசலை மிதிக்க வேண்டிய தாகிவிட்டது.

'நோட்டரி சர் டிஃபிகேட் வேணுமா பிரதர்' என்று விசாகனிடம் கேட்ட ஒரு கத்துக்குட்டி வக்கீலிடம், "இந்த நரகத்திலிருந்து விடுதலை வேண்டும், தர முடியுமா?" என்றான். அவன் விசாகனை வினோதமாகப் பார்த்துக்கொண்டே நகர்ந் தான்.

வக்கீல் சீதாராமன் சிரித்துக்கொண்டே வந்தார். எப்படி இவரால் சிரிக்க முடி கிறது? அவருக்கென்ன, 'ஐ ஹாவ் டன் மை பெஸ்ட்' என்று கழண்டு விடலாம். என் வருங்காலத்தின் ஒரு பகுதி ஜெயிலிலா சே...ச்சே... இருக்காது. நான் நாலாவது அக்யூஸ்டுதான்.

"பிபி கிட்ட பேசிட்டேன். ஜட்ஜம்மா ஜெயிலுக்கு ரவுண்ட்ஸ் போயிருக்காங் களாம். தீர்ப்பு வாசிக்கறதுக்கு மதியம் ரெண்டாயிடுமாம். நீங்க வேணா ரிலாக்ஸ் பண்ணிண்டு ஓட்டல்ல லன்ச்சை முடிச் சுண்டு வாங்கோ" என்றார் சீதாராமன்.

**த**ம்பி சேகரின் கல்யாண ரிசப்ஷ னுக்கு ஐஸ்கிரீமுக்குப் பதில் ரோஸ் மில்க் சொல்லியிருந்தார் சந்தானம். ஐஸ்கிரீம் இல்லாம ரிசப்ஷனா என்று கேட்டதற்கு, "என்ன பண்றதுனு எனக்குத் தெரியும்" என்று பதில் வந்தது.

"என்ன பண்றதுனு எனக் குத் தெரியும்."

சேகருக்கு நிச்சயம் பண்ணியதிலிருந்து இந்த வாக் கியத்தைக் குறைந்தபட்சம் இருபது முறை கேட்டிருப்பான் விசாகன்.

"நிச்சயதார்த்தம் ஆகஸ்ட் ரெண்டாம் தேதி. கொழந்தை அபிலாஷையும் அழச் சுண்டு ரெண்டு நாள் முன்னாடியே வந்து ருங்கோ." ஃபோனில் அப்பா சந்தானம் அழைத்தார்.

"என்ன அவசரம். ஒரு வருஷமாவது ஒரு வேலைல நிண்ணு காட்டட்டுமே..."

"நாங்க முடிவு பண்ணியாச்சு. கஷ்டப் படுற குடும்பம். அதனால பொண்ணு அட்ஜஸ்ட் பண்ணிண்டு இருப்பா. ஊரு செங்கோட்டை. அப்பா கிடையாது. இவ மூத்தவ. இன்னும் மூணு தங்கைகள் கல் யாணத்துக்கு இருக்கா. சேகர் வேலைக்குப்



யில் பைனான்ஸ் மானேஜராக, அபிலாஷுக்குச் செல்லம் கொடுக்கும் அப்பாவாக, கல்பனாவின் புருஷனாக, தென்றல் தவழும் தன் வாழ்வில் கருமேகம் சூழப் போவதை விசாகன் அப்போது உணர்ந்திருக்கவில்லை.

கல்யாணம் முடிந்து முதல் மாதம். கல்பனா முதல் தகவல் சொன்னாள்.

''சுதா ஏதோ பிரச்னை பண்றாளாம், உங்கம்மா ஃபோன் பண்ணினா.''

''நீ தலையக் கொடுக்காதே. அவா பாடு. என்ன பண்றாளாம்?''

''வந்து ஒரு மாசம் ஆகலை. செங்கோட்டைக்குப் போய் அவ அம்மாவோட ரெண்டு வாரம் இருந்துட்டு வருவாளாம்.''

''இருந்துட்டு வரட்டுமே.''

''ஒரு வாரம் போறாதாங்கறா.''

''நீ என்ன சொன்ன?''

''அவ இஷ்டப்படி விடுங்கோன்னேன். ஒத்துக்கலை.''

போவான். நீ ஒண்ணும் கவலைப் பட வேண்டாம்.''

''சேகர் ஓகே சொல்லிட்டானா?''

''அவனுக்கு என்ன தெரியும்? நாமதான் சொல்லிப் புரியவைக்கணும். நீ அவனைக் கலச்சுடாத'' ரிசீவர் பட்டென்று வைக்கப்பட்டது.

சேகருக்குப் பிரமாதமான படிப்பு கிடையாது. நாலு வருஷத்தில் பனிரெண்டு வேலை மாறினான்... இல்லை, மாற்றப் பட்டான். 'ரொம்ப ஸ்லோ, சீரியஸ்னஸ் இல்லை' என்று பலவிதமான காரணங்கள் சொன்னார்கள். 'ஒரு கால் கட்டு போட்டால் தானா சரியாப்போயிடும்' என்று, பெண் பார்த்து, நிச்சயம் பண்ணி, கல்யாணம் முடிந்தது.

திருச்சியில் தனியார் கம்பெனி

மூன்றாவது மாதம்...

''சுதாவும் சேகரும் பேசிக்கறதில்லையாம். சேகர் வேலையை விட்டாச்சாம். அதனால இருக்கலாம். சுதாவுக்கு கார்ல பீச், ஷாப்பிங் எல்லாம் போகணும்னு ஆசையாம்.''

''லோயர் மிடில் கிளாஸுக்கு இது கொஞ்சம் ஓவர்தான்.''

ஆறாவது மாதம்...

புத்திரன்

''சுதா ஐயாயிரத்துக்கு வேலைக்குப் போறாளாம். டூ வீலர் வேணுமாம். ஆனால் அவ சம்பளத்தில இன்ஸ்டால்மெண்ட் கட்ட மாட்டாளாம். அவ சம்பளத்தை அப்படியே செங்கோட்டைக்கு அனுப்பறாளாம். அவா ரெண்டு பேருக்குள்ள ஒண்ணுமே நடக்கலயாம். ரெண்டு பேருக்குமே அது பிடிக்கலையாம். ஜஸ்ட் ஃபிரெண்ட்ஸ் மாதிரி ஒரே ரூம்ல இருக்காளாம்.''

தீபாவளி...

''சுதாவுக்குப் பட்டுப்புடைவை, சுடிதார்னு நெறைய வாங்கிக் கொடுத்து தலை தீபாவளிக்கு சேகரோட செங்கோட்டைக்கு அனுப்பி இருக்காளாம்.''



''சீனு, இப்ப வந்த போன்கால் உன் மனைவிகிட்டேருந்து தானே?''

''எப்படித் தெரிஞ்சது?''

''உன் பதில் எல்லாமே சரி, ஆமாம், ஒகேனு மட்டும் கேட்டேன்.''

- என்.வி.ரமணி

ஒரு வருடம் முடிந்து...

''சுதாவுக்கு ஹிஸ்டீரியாவாம். பாத்திரத்தைப் பறக்க விடறாளாம். ஏக வசனத்தில பேசறாளாம். மரியாதையே போயிடுத்தாம்.''

ஒன்றரை வருடம் முடிந்து...

''சுதா தனியா சமச்சுக்கறாளாம். டி.வி. பார்க்கக் கூட ஹால் பக்கம் வர்றதில்லையாம். பெட் ரூமே கதினு இருக்காளாம்.''

''நாம பேசலாம்னா.''

''போன மாசம் பேசி அவமானப்பட்டது போறும்.''

இரண்டு வருடம் முடிந்து...

''சுதா எதுக்கெடுத்தாலும் போலிசுக்குப் போவேங்கறாளாம். அவ ஆஃபீஸ்ல யாரோ தூண்டிவிடுறாளாம்.''

''இது டேஞ்சராச்சே. சட்டம் பொம்மனாட்டிக்குச் சாதகமான்னா இருக்கு.''

''மூர்த்தி மாமா லீகல் ஒபீனியன் வாங்கிக்க சொல்றாராம்.''

''அதுக்கெல்லாம் அவசியமில்லை. அவாத்தில பெரியவாளைக் கூப்பிட்டு பேசி சரி பண்ணிடலாம்.''

''போன வாரம் இவா செங்கோட்டைக்குப் போய் பேசியாச்சு. சுதாவுக்கு இஷ்டமில்லாமத்தான் கல்யாணம் பண்ணினாளாம். அவ அப்படித்தான் இருப்பாளாம். நாமதான் அட்ஜஸ்ட் பண்ணிக்கணுமாம்.''

அம்மா ஒருநாள் ஃபோனில் பரபரத்தாள்.

''விசாகா... எங்களால இவள சமாளிக்க முடியல. வீட்டை சுதா பேர்ல எழுதிக் கொடுங்கோ. இல்லாட்டி டார்ச்சர் பண்றதா போலிஸ்ல கம்ப்ளைண்ட் பண்ணிடுவேன்னு ஃபோன்ல மிரட்டறா. எங்க காலத்துக்கப்புறம் ஒங்க பொண்ணுதான் எல்லாத்தயும் அனுபவிக்கப் போறான்னு கேட்டா, மூத்தவன் பங்குக்கு வரமாட்டான்னு என்ன நிச்சயம்னு கேக்கறா.''

''நான் வேணும்னா இப்பவே எழுதிக் கொடுத்துடறேனே.''

''எது பண்ணியும் பிரயோஜனமில்லை. எங்க காலத்துக்கப்புறம் இவ நம்ம சேகரைப் பாத்துப்பாங்கற நம்பிக்கை எங்களுக்கு இல்லை. பெரிய தப்பு பண்ணிட்டோம். அப்பா மூர்த்தியோட வக்கீலைப் பாக்கலாம்னு கிளம்பிப் போயிருக்கார்.''

''வக்கீலண்ட போகவேண்டாம்னு சொன்னேனே. லீகல் ரூட்ல போனா சிக்க

லாயிடும். நமக்குத்தான் கஷ்டம்.''

''அவ போலிசுக்குப் போயிட்டா?''

''போனா பாத்துக்கலாம்.''

விசாகன் பயந்தபடியே நடந்தது. வக்கீல் நோட்டீஸில் ஆரம்பித்து, விவாகரத்து வரை வந்துவிட்டது. அதோடு முடிந்திருந்தால் பரவாயில்லை. சுதா போலிஸுக்குப் போய் சேகரும் அப்பாவும் டவுரி கேட்டதாக போலிஸில் எஃப்.ஐ.ஆர். பதிவு செய்ததில் வினை ஆரம்பித்தது. விதி விசாகனையும் கல்பனாவையும் சேர்த்து விழுங்கியது.

''... குற்றம் சாட்டப்பட்டுள்ள நீங்கள் சைதாப்பேட்டை கோர்ட்டில் ஆஜராகும் படி...''

தபாலில் வந்த சம்மனைப் பார்த்து அதிர்ந்தான் விசாகன்.

'கோர்ட் வாசல் படியை மிதிப்போம் என்று கனவில்கூட நினைத்ததில்லை. அது சரி, என்னையும் கல்பனாவையும் எதற்கு இழுத்தார்கள்? அதிகமாகப் பணம் கறக்கலாமென்றா? சந்திக்கு வந்துவிட்டதே. ஆபீசுக்கு எத்தனை நாள் லீவு போட வேண்டும்? என்ன சொல்லி லீவு கேட்பது? கோர்ட்டில் கிரிமினல் கேஸ் நடக்கிறது என்றா? ஜெயிலுக்குப் போகவேண்டி வருமோ? என் எதிர்காலம்? அபிலாஷின் எதிர்காலம்?' மயக்கம் வந்தது. தலையில் கைகளை வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

''ஒண்ணும் பயப்பட வேண்டியதில்லை. எதுக்கும் ஆண்டிசிபேடரி பெயில் எடுத்துடுங்கோ'' என்றார் வக்கீல் சீதாராமன்.

''பெயிலா? எதுக்கு?''

''ஒரு பாதுகாப்புக்குத்தான்'' என்று ஆரம்பித்து,

கூப்பிட்டபோதெல்லாம் ஆஜராகி, அக்யூஸ்டுகளோடு அக்யூஸ்டாக கோர்ட்டில் கால் கடுக்க காத்து நின்று, கூண்டிலேறி, வக்கீல் சொல்லிக் கொடுத்ததை ஒப்பித்து, எதிர்த் தரப்பு வக்கீலிடம் மன்றாடி, ஃபேமிலி கோர்ட்டில் டிவோர்ஸ் வாங்கி, பேரம் பேசி பத்து லட்சத்துக்கு ஒத்துக்கொண்டு, வேளச்சேரி கிரவுண்டை விற்று, பத்து லட்சத்துக்கு டி.டி. எடுத்து...

**ம**ணி மூன்றாகிவிட்டது.

'சேகர், சந்தானம், அகிலாண்டேஸ்வரி, விசாகன், கல்பனா' என்று அழைப்பு வர, ஒருவர் பின் ஒருவராகக் கூண்டுக்குள் ஏறினார்கள்.

'... குற்றவாளிகள் இல்லை என்று தீர்ப்பளிக்கப்படுகிறது.'

விசாகனுக்கு ஒரு பந்தம் முறிந்த வலி மட்டுமே இருந்தது.

''இனிமே கோர்ட்டுக்கு வர வேண்டாம் இல்ல'' என்று சேகர் கேட்டபோது, விசாகனுக்குக் கோபம் வரவில்லை.

பத்து லட்சம் டி.டி.யைக் கையில் வாங்கியதும் சுதா முகத்தில் நிகழ்ந்த பூரிப்பு மனத்திரையில் சட்டென்று வந்து போனது.

'நடந்தது நன்றாகவே நடந்தது' என்று தோன்றியது, கோர்ட்டை விட்டு வெளியே வந்த விசாகனுக்கு.

கருமேகம் விலகி வானம் தெளிந்து இருந்தது. ★

*''மந்திரியாரே காட்டில் நமது இளவரசியைப் புலியிடமிருந்து காப்பாற்றிய வீரனை என்னை வந்து சந்திக்க ஏன் ஏற்பாடு செய்யவில்லை?''*

*''தாங்கள் மனத்தில் நினைப்பதைப் புரிந்துகொண்டு சந்திப்பைத் தவிர்க்கிறான் அரசே!''*

**- என்.வி.ரமணி**



● பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

*? இரண்டாம் தலைமுறைக்கான ஸ்பெக்ட்ரம் ஒதுக்கீட்டில் ஒரு லட்சத்து முப்பத்தொன் பதாயிரத்து அறுநூற்று ஐம்பத்திரண்டு கோடி ஊழலைச் சுட்டிக் காட்டியுள்ளாரே தலைமை கணக்குத் தணிக்கையாளர்?*

! கல்மாடியையும் அசோக் சவானையும் பதவி நீக்கம் செய்தாலும் மத்தியில் ஆட்சி நிலைக்கும்; ராசாவை நீக்கினால் ஆட்சி கவிழும்! எனவே, தணிக்கையாளர் கணக்கு வேறு; அரசியல் கணக்கு வேறு என்று உணர்க!

● ஜி.ராமதாஸ், தஞ்சை

*? "காவிரி நதி நீரைப் பெறுவதற்காக கருணாநிதி எழுதிய கடிதங்களின் புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு என்ன செய்வது?'' என்று கேட்கிறாரே ஜெய லலிதா?*

! ஒன்றும் செய்ய முடியாது; காவிரிக்காக உண்ணாவிரதம் இருந்த ஜெ.வரலாறு போலவே அந்தப் புள்ளிவிவரங்களும் சும்மா காட்சிப் பொருள்தான்!

# நாற்பது கேட்கிறாரே ராமதாஸ்?



* பழைய பரிதாபம்!



* தாராள மனசு!



* பொருளாதாரப் பாடம்!



* சினிமா ஸ்டைல்!

● சரா ஏ.முரளி, கள்ளக்குறிச்சி ★

*? இளைஞர் காங்கிரஸாரின் பாதயாத் திரை - 2011, தேர்தலுக்குப் பலனளிக்குமா?*

! கிராம அளவில் இளைஞர் காங்கிரஸ் போய் மக்களிடையே - குறிப்பாக இளை ஞர்களிடையே - நம்பிக்கையையும் எதிர் பார்ப்பையும் விதைக்க முடியும். ஆனால், அந்த விதைக்கு நீர் பாய்ச்சி, உரமிட்டு, களை யெடுத்துப் பாடுபட முதியோர் காங்கிரஸ் முன்வர வேண்டுமே! அவர்கள் அறுவடை யில் மட்டுமே கவனம் செலுத்தினால் மகசூல் மந்தமாகத்தான் இருக்கும்.

● வி.எம்.செய்யது புகாரி, அதிராம்பட்டினம்

*? ஜவாஹர்லால் நேருவின் மறைவுக்குத் தாம் இரங்கல் கவிதை எழுதியதை இப் போது தமிழக முதல்வர் நினைவுகூர வேண்டியதன் அவசியம் என்ன?*

! தி.மு.க.வினர், காங்கிரஸ் தலைவர்களைப் பற்றி மேடைகளில் அநாகரிகமாகப் பேசியது காங்கிரஸார் மனத்தில் இன்றும் பகைமையாக இருக்கும்போது, வேறு என்ன செய்ய முடி யும்? பரிகாரம் செய்து பரிதாபம் தேடுகிறார் கலைஞர்.

● ரஞ்சனிப்ரியன், பள்ளிப்பாளையம்

*? ஐந்து ஆண்டுகளில் தமிழகம் குடிசை இல்லாத மாநிலமாக மாற்றப்படும் என்று*

துணை முதல்வர் கூறியுள்ளாரே?

! குடிசைகள், காங்கிரீட் அடுக்கு மாடிகளாக மாறினால் மட்டும் வாழ்க்கைத் தரம் உயராது. கல்வி, அடிப்படை சுகாதாரம், வேலை வாய்ப்பு - இவை உறுதி செய்யப்பட்டாலொழிய, காங்கிரீட் கட்டடங்களும் புது ரகச் சேரிகளாகவே விளங்கும்.

● எஸ்.கதிரேசன், பேரணாம்பட்டு

? தமிழகத்தில் மகளிர் சுய உதவிக் குழுக்கள் மாபெரும் இயக்கமாக மாறி வருகின்றன என்கிறாரே ஸ்டாலின்?

! சுய உதவி இயக்கமாகவே வளர்ந்தால் சரி; தேர்தல் சமயத்தில் அரசியல் இயக்கமாக அதை மாற்றிவிடுவதுதான் தவறு.



❀ தெரியாத எண்

● D. ராமகிருஷ்ணன், குளித்தலை

? லஞ்ச - ஊழல் பெருச்சாளிகளின் சொத்துக்களைப் பறிமுதல் செய்து, அதைக் கொண்டு அரசாங்கப் பள்ளிகள் கட்டப் போவதாக நிதிஷ் குமார் தேர்தல் வாக்குறுதி கொடுத்துள்ளாரே - வித்தியாசமாக இல்லை?

! சினிமா பாணியில் வோட்டுக்காக வாக்குறுதிகள் அளிப்பது சுலபம்; ஆட்சிக்கு வந்து அமல்படுத்துவது கஷ்டம். ராபின்ஹூட் கூட சட்டத்தால் கொள்ளைக் காரனாகத்தான் கருதப்படுவான்! லஞ்ச - ஊழலைக் கட்டுப் படுத்த வேறு வழிகளை நிதிஷ் யோசிக்க வேண்டும்.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? சம்பளம் அதிகரித்தால் தானாக விலைவாசியும் உயரத்தான் செய்யும் என்று அமைச்சர் பொன்முடி கூறியிருக்கிறாரே?

! அமைச்சரின் பொருளாதாரப் பாடம் சரியானதுதான் என்றாலும் அமைப்பு சாராத் துறைகளில் பணிபுரியும் கோடிக்கணக்கான மக்களின் பிரச்னையைத் தீர்க்காது. நல்லவேளை விலைவாசி ஏறினால் பசி குறையும் என்று பொன்மொழி உதிர்க்காமல் இருந்தாரே!

● பா.ஜெயப்பிரகாஷ், சேத்துமடை

? "மே.வங்கத்தில் திரிணமுல்-காங்கிரஸ் கூட்டணி வென்றால், முதல்வர் பதவியை பிரணாப் முகர்ஜிக்கு விட்டுத்தரத் தயார்..." என மமதா பானர்ஜி கூறுகிறாரே?

! இந்த அறிக்கை மூலம் மமதா, காங்கிரஸ் - திரிணமுல் கூட்டணியைப் பலப்படுத்துகிறார். பிரணாப், மத்திய

நீங்கள் கேட்டவை


* மாறுபடும்...

அமைச்சர் பதவியைத் துறந்து மாநிலத்துக்கு வர மாட்டார் என்று நம்புகிறார்! கோபம், படபடப்பு மிக்க மமதா, அதே காரணங்களுக்காகத் தாம் முதல்வராவது நல்ல. நல்ல என்று மட்டும் நிச்சயம் உணர்ந்திருக்க மாட்டார்!


* ... அரசியல்...

● சி.விஜயாம்பாள், கட்டிகானப்பள்ளி

? "எந்தக் கூட்டணியில் இருந்தாலும் நாற்பது தொகுதிகள் கேட்போம்," என்கிறாரே ராமதாஸ்?

! அதிகபட்சம் நாற்பது தொகுதிகள் கேட்பார்; குறைந்தபட்சம் எவ்வளவு ஒப்புக்கொள்வார்? - அதை இப்போது சொல்ல மாட்டார்! எத்தனை தொகுதிகளில் ஜெயிப்பார்? அது அவருக்கே தெரியாது!


* ... கணக்கு!

● ஜி.கே.எஸ்.மூர்த்தி, கோபிசெட்டிப்பாளையம்

? முதல்வருக்கு இந்திய யூனியன் முஸ்லிம் லீக் 'நல்லிணக்க நாயகன்' விருது வழங்குவது குறித்து?

! ஜாதி, மத, இன வேறுபாடுகள் கருதாது, பாரத தேச மக்கள் நல்லிணக்கத்தோடு வாழ வேண்டும் என்று கருதும் நூறு கோடி இந்தியர்களின் சார்பில் முதல்வர் அதை ஏற்று, 'ஆம் ஆத்மி'க்கே விருதை சமர்ப்பிக்க வேண்டும்.

● ச.ஜான் பிரிட்டோ, திண்டுக்கல் ☐

? டாஸ்மாக் மற்றும் அங்கன்வாடி பணியாளர்களின் போராட்டத்தை முளையிலேயே கிள்ளி எறிந்த முதல்வர், ஆசிரியர்களின் போராட்டத்தைக் காவல்துறை ஆசியோடு நடத்தச் செய்தது, 'வாக்குப் பெட்டி என்னும் புதையலைக் காத்த பூதத்தை' வணங்குவதுபோல் உள்ளதே?

! அரசுப் பணியாளர், அரசு நிறுவனப் பணியாளர்; தாற்காலிகப் பணியாளர், நிரந்தர ஊழியர் என்றெல்லாம் வித்தியாசம் பார்க்கிறார் முதல்வர். அரசுப் போக்குவரத்துக் கழக ஊழியர்கள், அரசுப் பணியாளர்களாகக் கருதப்பட வேண்டும் என்ற கோரிக்கைகூட எழுந்துள்ளது. அரசு, தொழில் - வியாபாரத்தில் ஈடுபடுவதில் உள்ள சிக்கல்களையே இப்போராட்டங்கள் உணர்த்தும். அரசின் பணி, தர்ம நியாயங்களை நிலைநாட்டி அரசாள்வது மட்டுமே.

● சுண்.சிவகுமார், திருமருகல்

? உறவு - நட்பு - மனிதர்களுக்கு அதிக சுகம் எதில் உள்ளது?

! உறவின் ஆழத்தை நட்பிலும் நட்பின் இலகுத்தன்மையை உறவிலும் அனுபவிப்பதே மிகுந்த சுகம். ●

☐ ரூ.150/ பரிசு பெறுபவர்:
ச.ஜான் பிரிட்டோ, திண்டுக்கல்

★ ரூ. 75/ பரிசு பெறுபவர்:
சரா ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

உங்கள் கேள்விகளை 'தராசு' என்று குறிப்பிட்டு kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்ஃபோனில், **KAGQA** என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

# டைம்பாஸ் நியூஸ் அல்ல... டைமண்ட் நியூஸ்!

- உமா ஷக்தி

பாடலாசிரியர் தாமரை. தனித்துவமான பெண். அவரிடம் பேசினால் அவரின் இயல்பு நம்மை ஆச்சர்யப்படுத்துகிறது. இந்தச் செய்திகள் டைம்பாஸ் நியூஸ் அல்ல... டைமண்ட் நியூஸ்! அவர் சொன்னதிலிருந்து சில...

> நான் ஒரு தீவிர நாத்திகவாதி. ஒரு முழு ராகுகாலத்தில் தொடங்கி முடித்ததுதான் வசீகரா பாடல்.

- "நான் 1000 ரூபாய்க்கு மேல் துணி எடுத்தது கிடையாது. இதுவரை பட்டுப் புடைவை கட்டியது இல்லை. (திருமணத்தில்கூட). பட்டுப் பூச்சிகளைக் கொன்று அப்படியென்ன அசைவ அலங்காரம் பெண்ணுக்கு? அதனாலேயே புடைவை விளம்பரத்துக்குப் பாடல் எழுத மறுத்துவிட்டேன்."
- "கடன் வாங்குவது இல்லை - எந்தச் சூழலிலும். எனக்குக் கடன் ஏதும் கிடையாது."
- "திரைப்படங்களுக்குப் பாடல் எழுதினாலும் நான் முழுமையாக ஒரு திரைப்படம் பார்த்து எட்டு வருடம் ஆகிவிட்டது."
- "தீவிர நாத்திகவாதி. எந்தக் குறு நம்பிக்கையும் (சென்டிமென்ட்) எனக்கில்லை. திரைப்படப் பூஜைக்குப் போவது கிடையாது. ஒரு முழு ராகு காலத்தில் தொடங்கி முடித்ததுதான் 'வசீகரா...' பாடல்."
- "தேன், தோல் பொருட்கள் தொடாத முழுமையான சைவம் நான்."
- "25 வருடங்களுக்கு முன் என் அம்மா போட்ட ஒரு செயினும் கம்மலும்தான் இப்போதும் எனக்கு. நகைக் கடைக்குப் போனது இல்லை. தங்கமும் புடைவையும்தான் ஒரு பெண் ஆணாதிக்கத்துக்கு அடிமையாகக் காரணம்."
- "இத்தனை ஆண்டுகளில் சினிமா உலகில் ஒரு ஆண்கூட என்னிடம் எந்த வகையிலும் தவறாகப் பேசியதோ, நடந்து கொண்டதோ இல்லை. நல்லவர்களை இனம் கண்டு தேர்வு செய்து நமது பயணத்தைத் தொடங்குவது நம்மிடம்தான் இருக்கிறது."
- "ஆணாதிக்கத்தை எதிர்க்க வேண்டிய பெண், எடுக்க வேண்டிய ஆயுதம் அறிவுதான்."
- "நானும் தியாகுவும் பொழுதுபோக்குக்காக எந்த நண்பர்கள் வீட்டுக்கும் அளவளாவப் போனதில்லை."




படம்: ஸ்ரீஹரி

## ஊர்வசி

# நான் என்னால வாழுறவ! 20





செயலை விட சில நேரம் சொல் முக்கிய மானதா போயிடும். அட.... சொல்லே சில நேரம் செயலாகக் கூட மாறிடும். அதனாலேயே 'சொல் அதுவே செயல்'-ன்னு ஒரு சொலவடை உண்டு. ஒரு நாட்டின் ஆட்சியைக் கைப்பற்ற அல்லது ஆட் சியை விட்டு 'தொபீர்'ன்னு கீழே விழ, பேச்சு... சொல் காரணமா இருந்ததை சர்வ சாதாரணமா நாம பார்த்துக் கிட்டுத்தானே இருக்கோம். காலம் யாரை எப்போ எங்கே எப்படி மாற்றும்னு சொல்ல முடியாது. நம்ம சொல்லை மட்டும் சுத்தமாவும் ஷார்ப் பாவும் வெச்சக்கணும். அப்படி வெச்சா பொழைச்சிக்கலாம். பல தமிழ்ப் படங்களில் கதை இல்லேனா கூட 'பஞ்ச்' டயலாக்கிலே பல வாரம் ஓடிடுதே. அப்படினா பேச்சுக்கும் சொல்லுக்கும் எவ்வளவு மரியாதை பாரு... என்ன, பேசிக்கிட்டு இருக் கும் போதே யோசிக்கிறீங்க? கதை யில்லாம பஞ்ச் டயலாக்கில் ஓடுன படம் எதுன்னுதானே?! இத மாதிரி தான் பேசிக்கிட்டு இருக்கும்போது, மனசு மாறுவேஷம் போட்டுக்

நவம்பர் மாத பட்டுப் புடைவைகளைப் பரிசாக வழங்குவோர்:

கிட்டு ஓடிக்கிட்டே இருக்குதோ அதுபோல பலருடைய வாழ்வும் க்ஷணநேரம் மாறிப் போயிடுது வேஷம் போல. அப்படி வேஷம் போட்டு (அட மேக்-அப்தான்) நடிக்கப் போன ஒரு கிராமத்தில் என்னைப் பாதித்த ஒரு பெண், தாமரைக்கா.

'ஆயிரம் தாமரை மொட்டுக்களே வந்து ஆனந்த கும்மியைக் கொட்டுங்களே'-ன்ற பாட்டு கேக்கிற போதெல்லாம் எனக்கு அவள் ஞாபகம் தான் வரும்.

அந்தத் தாமரை, ஆனந்த கும்மியைக் கேட்டதே கிடையாது. ஷூட்டிங்குக்காக வந்த எங்களைத் தங்கவெச்சிருந்த வீட்டுக்குப் பக்கத்தில் தான் அவள் வீடு. எப்போதும் சிடுசிடுவென்ற முகம். 'நான் பொண்ணு இல்ல எங்கிட்ட வராதே' என்கிற மாதிரியான நடையும் பேச்சும். அது அவளே வரித்துக் கொண்டது போலத் தோன்றும். யாருமற்ற அந்த வீட்டில் காலையில் வாசலில் நீர் தெளித்துக் கோலம் போட்டு, மாடு கழுவி, தீனி வெச்சி, அடுப்பில் வெந்நீர் போட்டு, பாத்திரம் கழுவி, தலையில் ஒண்ணு, இடுப்பில் ஒண்ணு, கையில் ஒண்ணுன்னு மூன்று குடத்தை ஒரு சாகச சர்க்கஸ்காரி மாதிரி குளத்துலேர்ந்து தூக்கிட்டு வந்து, தனக்குன்னு ஏதோ பொங்கித் தின்னுட்டு, ஆத்தங்கரையில் துணி துவைச்சுட்டு வீட்டுக்கு வந்து காயப்போட்டு, மரத்தை வெட்டி விறகாகப் பொளந்து... அடடா எப்போ பார்த்தாலும் ரோபோ மாதிரி ஏதாவது ஒரு வேலையில் இருந்துகிட்டே இருப்பா, சாவி கொடுத்த பொம்மை மாதிரி. எல்லோரையும் பொம்மையா மாத்தி சாவி கொடுத்துக்கிட்டே இருக்கும் சாமியைப் பார்த்து நாலு கேள்வி நறுக்குனு கேட்கணும்னு கூட தோணுது.



**'பூனைப் பாதமென நுழையும் இரவு' அப்படியொரு இரவில்தான் எனக்கு அவளைப் பற்றிய கதைகள் தெரிய வந்தது.**

தமிழச்சி தங்கப்பாண்டியனின் கவிதையில வருமே 'பூனைப் பாதமென நுழையும் இரவு,' அப்படியொரு இரவில்தான் எனக்கு அவளைப் பற்றிய கதைகள் தெரிய வந்தது. யாருடனும் பேசாத... அல்லது யாரும் அவளோடு பேசாத... யாருமில்லாமலிருக்கும் அவளின் தனிமை பற்றி ஒருவர் சொன்னார்.



'பகிரப்படாத நேசத்தின்
துயரென்னைத் தின்கிறது
தனக்குத்தானே கட்டிக்
கொண்ட
கைகளின் தனிமை போல'

என்று எழுதும் தமிழச்சி வரிகளைப் போல அவள் தம்மைத் தாமே கைகளால் கட்டிக் கொண்டாள். பகிர்ந்து கொள்ள முடியாத அவளின் நேசத்தை நாமும் கொஞ்சம் எடுக்கலாம் என்று தோன்றியது. லஞ்ச் நேரம் ஷூட்டிங்கில் சாப்பிட பிடிக்காமல் இவ்வளவு ஜட்டமும் வீணா போகுமேன்னு 'தாமரைக்கா சாப்பிடுறீங்களா?' முதல் முறையா ஒரு கேள்வியைப் போட்டேன். சுட்டு எரிச்சுறாப் போல மேலும் கீழும் என்னைப் பார்த்து ''என்ன நான் எச்சப் பொருளுன்னு குத்திக் காட்டுறியா? நான் எச்சிலில்ல. சுத்தமானவ! நான் யாரையும் அண்ட வேண்டியவ இல்ல... நீங்க தங்கி இருக்கிற வீடு என்னோடது... தெரிஞ்சுக்கோ... நான் என்னால வாழுறவ புரியுதா?''என்று ஒரு ஆணின் தோரணையில் பொறிந்து தள்ளி விட்டாள்.

**அந்தக் கிராமத்தில் கிராம தேவதைத் திருவிழா கோலாகலமாகத் தொடங்க காப்புக் கட்டியிருந்த சமயம்...**

'**நா**ன் என்னால வாழுறவ' அந்தச் சொல் என்னைச் சுத்திக்கிட்டே இருந்தது. அவள் கோபப்பட்டு கேட்டது என்னைப் பாதிக்கவில்லை. அதற்கு முன்பாகவே நான் கேள்விப்பட்ட அவளின் வாழ்க்கை என்னைப் பெரிதும் பாதித்தது. பல வருடங்களுக்கு முன் அந்தக் கிராமத்தில் கிராம தேவதைத் திருவிழா கோலாகலமாகத் தொடங்க காப்புக் கட்டியிருந்த சமயம். வெளியாட்கள் யாரும் உள்ளே வர முடியாது. அம்மாவோட மட்டும் இருந்தாள் தாமரைக்கா. அவள் பூப்பெய்தி சில மாதங்கள் மட்டுமே ஆகிப் பூரித்திருந்த பொழுதுகள்...

(தொடரும்)

# ஊர்வசி போட்டி சில்க் சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

**வாசகர்களே!**

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவைப் பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

நவம்பர் மாதக் கூப்பன்களை இணைத்து அனுப்ப

கடைசித் தேதி : **10.12.10**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**

கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

---

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

..................பின்கோடு:..................

தொலைபேசி : ..............................................

இ-மெயில் : ..............................................

நவம்பர் - 21

**ஊர்வசி சிலாகிக்கும் கவிஞர்?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ குட்டி ரேவதி
- ☐ தமிழச்சி தங்கபாண்டியன்
- ☐ தாமரை
- ☐ ஊர்வசி

# நமீதா பாரம்பரியப் பட்டு!



● வைரம் பதித்த விநாயகர் உருவ காதணி அறிமுகம்.

*வாங்கித் தராத கணவர் காதைப் பிடித்துத் தோப்புக் கரணம் போடணுமா?*

● ஒலி ஒளியுடன் வாசனையையும் பரப்பும் டி.வி. வருகிறதாம்.

*இப்போதே சில நிகழ்ச்சிகள் நாறுகிறதே என்கிறார் ஒரு குடும்பத் தலைவி.*

● சீன குங் பூ சகோதரிகளைச் சண்டையில் வெல்பவர்களுடன்தான் திருமணமாம்.

*திருமணத்துக்குப் பிந்திய சண்டைகளில் கணவர்களால் ஜெயிக்க முடியுமா?*

● சிறுத்தைகள் திருப்பதியை விட்டு நகராமல் சண்டி செய்கிறதாம்!

*கோயில் ஊழியர்களின் ஜாதகம் என்கிற தடித்த விரட்டலுக்குப் பிறகுமா*

● ஆமதாபாத்தில் 1001 விளக்குகளை சுமந்து ஒரு பெண் நடனமாடினாராம்.

*சாதனை புரிவதில் அணையாத அ வம் போலிருக்கு.*

● தீப்பெட்டிக்குள் அடங்கிவிடு மெல்லிய பட்டுப் புடைவை தயாரிப்பு.

*இதற்கு நமீதா பாரம்பரியப் பட்டு எனப் பெயர் சூட்டலாம்.*

● உத்தரப் பிரதேச கிராமத்தில் ஆங்கில மொழிக்குக் கோயில் உருவாகிறதாம்.

*இதில் ஷேக்ஸ்பியருக்கு சன்னிதி உண்டா? பிரசாத பிளம் கேக்கா?*



● ரஷ்ய அதிபர் புதின் காதலியை விடுத்து மனைவியுடன் வாழ் கிறாராம்.

*இவருக்குத் தாம பத்ய வாழ்க்கை புதிர புனிதமா அல்ல புதின-மே!*

● 31 லிட்டர் கறக்கும் அரியானா முர்ரா எருமையின் விலை டாடா நானோ காருக் குச் சமமாம்.

*இப்படி விளம்பரப்படுத்திய எரு மையை மம்தா பானர்ஜி வாங்குவாரா?*






ஜே.எஸ்.ராகவன்

# கொஞ்சம் மாறுங்களேன்!



எங்கும் எதிலும் பெண்கள். பெண்கள் இன்று நுழையாத துறையே இல்லை. எனினும் பெரும்பாலான பெண்கள் இன்றைய காலகட்டத்தில் பொது இடங்களில் சந்திக்கும் சிக்கல்கள், சோதனைகள் தான் என்னென்ன என்று அறியும் ஆர்வமுடன் சில பெண்களை நாம் கேட்ட பொழுது...



✱ ரங்கநாயகி



✱ விஜயலட்சுமி

**ரங்கநாயகி (வங்கி ஊழியர்):**

ஒரு ஷாப்பிங் மாலுக்குள் சென்று நல்ல துணி கடையில் நமக்கு பிடித்தமான உடையை தேர்ந்தெடுத்துவிட்டு அந்த உடையின் அளவு நமக்கு சரியாகப் பொருந்தியிருக்கிறதா இல்லையா என ட்ரையல் ரூமுக்குள் சென்று பார்க்க முடியவில்லை. காரணம், எங்கே செல்ஃபோன் கேமராக்கள் நம்மை படம் பிடித்து விடுமோ என்ற பயம். நமக்கே தெரியாமல் நம்மை படம் எடுத்து விட்டு அதை எப்படி எப்படியோ அசிங்கமாக கிராபிக்ஸ் செய்து அதை இணையதளங்களில் அரங்கேற்றி, விடுவார்களோ என்ற பயம்தான்.

✱ பி. ஷரண்யா

**பி. ஷரண்யா (தனியார் தொலைக்காட்சி நிலையத்தில் பணியாற்றுபவர்):**

என்னைப் போன்ற இளம் பெண்களுக்குத் தொல்லை தரக்கூடியது எது என்றால், இந்த ஆண்கள் விடும் மொறைப்புதான். நான் பஸ், ஆட்டோ என பல நேரங்களில் பயணம் செய்யும் பொழுது, இந்த மொறைப்பையும் அதைத் தொடர்ந்து வரும் கேவலமான கமெண்ட்களையும் கண்டுதான் பொங்கி எழுந்திருக்கிறேன். கூட்டமான பஸ்ஸில் ஏறிவிட்டால் அவ்வளவுதான், இடி மன்னர்களையும், கமெண்ட் கண்ணன்களையும், ஜொள் ஜோல்னா பைகளையும் தாண்டி பத்திரமா நம்ம ஸ்டாப்பிங்குக்கு வந்து சேருவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும்... பெண்களாகிய எங்களால் பொது இடங்கள்ல நிம்மதியா இருக்க முடியல.

**திருமதி விஜயலட்சுமி (குடும்பத் தலைவி):**

ஒரு பெண் எப்படி உயர் பதவிக்கு வரலாம்? என்ற ஒரு மனோபாவம் நிச்சயம் அவளுடன் வேலை பார்க்கும் இடத்தில் சக ஆண் ஊழியர்களுக்கு இருக்கு. அவங்களோட போராடி அவர்களின் ராஜதந்திரத்தை ஜெயிக்கிறதுதான் பெரிய சிக்கல்.

**தொகுப்பு: நளினிசம்பத்குமார்**

**பெண்களே! நீங்கள் பொது இடங்களில் எதிர்கொள்ளும் சிக்கல்கள்... சங்கடங்கள்... என்னென்ன? எழுதி அனுப்புங்களேன்... எப்படி அதை தீர்க்கலாம். கூடிப் பேசி விவாதிக்கலாம். உங்கள் கருத்துக்களை 'கொஞ்சம் மாறுங்களேன்' என்று தலைப்பிட்டு 20.11.2010 க்குள் அனுப்புங்கள்.**

# சச்சின் ரஜினி மாதிரி



**சூப்பர் ஷெஃப் வெங்கடேஷ் பட்**

கிரிக்கெட்டுன்னா எனக்கு உசிரு. ஒவ்வொரு மேட்சையும் சமயம் கிடைக்கும்போதெல்லாம் முழுசா பார்த்துடுவேன். ஒன்டே மேட்ச்தான் என் ஃபேவரிட். அதுவும் சச்சின் ஆடுறத பார்க்கும்போது, பைத்தியமே ஆயிடுவேன். அவருக்குச் சமைச்சுப் பரிமாறினது ஒரு சந்தோஷம்னா, அவரோடு டேபிள் டென்னிஸ் ஆடுனது இன்னொரு சந்தோஷம். டேபிள் டென்னிஸா? அது கடைசியில.

கிரிக்கெட்டுல ஸ்ரீநாத், வெங்கடேஷ் பிரசாத், கும்ப்ளே எல்லாம் என் சாப்பாட்டை ருசிச்சு சாப்பிட்டு இருக்காங்க. ஒவ்வொருத்தர் ருசியும் ஒவ்வொரு மாதிரி. அதேபோல, அவங்க பிஹேவியரும் வேற வேற மாதிரிதான் இருக்கும்.

பிராக்டீஸ் செஷன்ல ஒரு மாதிரி இருப்பாங்க, கிரிக்கெட் மேட்சின் போது வேற மாதிரி இருப்பாங்க. கோச்சிங் கேம்ப் சென்னையில் நடக்கும்போது, எங்க ரெஸ்டாரண்டுக்கு எல்லா கிரிக்கெட்டர்ஸும் வந்துடுவாங்க.

ஸ்ரீநாத்தும் வெங்கடேஷ் பிரசாத்தும் நேரா கிச்சனுக்கே வந்துடுவாங்க. ஊர் ஊரா போய் விளையாடறவங்களுக்கு நாக்கு செத்துப் போயிருக்கும். எங்கே போனா, நல்ல சாப்பாடு கிடைக்கும்னு ஏங்கிக்கிட்டே இருப்பாங்க. எத்தனைதான் வித்தியாசமான ஐட்டங்கள் செஞ்சு வெச்சிருந்தாலும், 'ஹோம் மேட்' சாப்பாடுதான் அவங்க ஆசை.

ஸ்ரீநாத்துக்கு மைசூர் ரசம் ரொம்பப் பிடிக்கும். எப்ப வந்தாலும் மைசூர் ரசம் செய்யச் சொல்லி, வாங்கிக் குடிப்பார். அதேபோல, சின்ன உருளைக் கிழங்குன்னா உசிரு. தயிர்சாதத்துக்கு உருளை ரோஸ்ட் வேணும். சும்மா தட்டுல போட்டுகிட்டுச் சாப்பிட்டுக்கிட்டே இருப்பார். பாலக், கீரைகள் எல்லாம் சாப்பிடுவார்.

நான் வெஜ்ஜுல, வறுத்த கோழிக் கறி பிடிக்கும்.

வெங்கடேஷ் பிரசாத்தும் ஸ்ரீநாத்தும் பயங்கர ஃப்ரெண்ட்ஸ். வெங்கடேஷும் நல்லா சாப்பிடுவாரு. மணிக்கணக்கா கிரிக்கெட்டைப் பத்திப் பேசிக்கிட்டே எல்லாத்தையும் பூந்து விளையாடுவாங்க.

நான் கொஞ்சம் அதிகப் பிரசங்கி. அதுவும் கிரிக்கெட் பத்தி ரொம்ப தெரிஞ்சமாதிரி கேள்வியா கேட்டுக்கிட்டே இருப்பேன். ஒரு சமையல்காரன் தானேங்கற எண்ணமே இல்லாம ரொம்ப ஜாலியா பதில் சொல்லுவாங்க. தங்களோட டிஸ்கஷன்ல என்னையும் சேர்த்துக்குவாங்க.

வெங்கடேஷ் ஸ்வீட் ப்ரியர். பாதாம் அல்வா, அல்போன்ஸோ மாம்பழம் அவரோட ஃபேவரிட். அவரோட இன்னொரு ஃபேவரிட், மங்களூர் போண்டா. அதுக்கு



சேட் டிஷ்ஷா அவல், தேங்காய் துருவல், வெல்லம் எல்லாம் சேர்த்து ஒரு ஐட்டம் செய்து தருவோம். அதேபோல், நீர் தோசைன்னு ஒரு தோசை செய்து தரு வோம். ஒவ்வொரு ஐட்டத்தையும் மிச் சம் வெக்காம காலி பண்ணிடுவார் வெங்கடேஷ்.

**பொ**துவா, பெங்களூரு, மங்களூரு காரங்களுக்கே ஸ்வீட் தூக்கலா இருக் கணும். எல்லா ஐட்டங்களிலும் ஒரு துளி சர்க்கரையைத் தூவிவிடுவாங்க. மத்த வங்க, ஒரே தித்திக்க வழியுதேன்னு முகத் தைச் சுளிச்சுப்பாங்க. ஆனா, கர்நாடக ஆளுங்க அதை ரொம்ப ரசிப்பாங்க.

அதேபோல, இவங்களுக்கு வேற எங்க போய் சாப்பிட்டாலும் உடம்புக்கு ஒத்துக்கவே ஒத்துக்காது. நார்த் இந்தியா போனா, ஸ்பைசியா இருக்கும். இல்ல புளி தூக்கலா இருக்கும். நெஞ்சு எரியற மாதிரி காரமா இருக்கும். இன்னொரு பிரச்னை, மங்களூரு டேஸ்ட், கைமணம் வரவே வராது.

கிரிக்கெட் ஆடப் போயிட்டு, இப்படி யெல்லாம் சாப்பாட்டுக்கு அலைஞ்சா முடியுமா? அதனால், ரொம்ப கண்ட் ரோலா இருப்பாங்க. வாய்ப்பு கிடைச்சா, பூந்து விளையாடுவாங்க.

எனக்கு இவங்களோட சைக்காலஜி தெரியும். அதனால், ஒரிஜினல் மங்களூரு டேஸ்ட்டோட சமைச்சுக் கொடுத்துடு வேன். இதெல்லாம் கோச்சிங் டைம்ல தான் சாத்தியம்.

**அ**தே டெஸ்ட் மேட்ச், ஒன்டே மேட்ச் சமயத்துல, இவங்க வேற மாதிரி ஆயிடு வாங்க. இவங்க ஓட்டல்ல தங்க வரும் போதே, அவங்களோட தேர்வுகள் என்னென்னன்னும் முன்னாடியே லிஸ்டு வந்துடும். மேட்ச் சமையத்துல, அவங்க டையடீஷியன் சொல்றதுதான் வேதவாக்கு.

மேட்சுகளுக்கு முன்னால, ஹெவியா சாப்பிட மாட்டாங்க. குறிப்பாக பௌலர்கள், ரெட் பீன் வித் சாஸ் நிறைய சாப்பிடுவாங்க. பயங்கர எனர்ஜி கொடுக்கும் அது. கிரீன் ஆப்பிள் ஜூஸும் எனர்ஜி கொடுக்கும். ப்ரௌன் பிரெட்டு, ஃபேட்லெஸ் பட்டர், கேரட் ஜூஸ் தான் நிறையச் சாப்பிடுவாங்க. ஸ்வீட்டே தொட மாட்டாங்க.

ரொம்ப டென்ஷனா வேற இருப்பாங்க. டெஸ்ட் மேட்ச்னா, சாயங்காலம் கீழே ரெஸ்டா ரண்ட் பக்கமே வரமாட்டாங்க. மேட்ச் முடிச் சுட்டு, எக்ஸர்சைஸ் முடிச்சுட்டு, லைட்டா ரூம்லேயே சாப்பிட்டுட்டு, சீக்கிரம் படுத்துக்கு வாங்க. ஒன் டே மேட்ச்னா, அது கலரே வேற.

மேட்ச் வின் பண்ணிட்டாங்கன்னா, ராத்திரி பயங்கர டின்னர் இருக்கும். நாலு ஸ்டார்ட்டர், ஐந்து ஸ்டார்ட்டர் கூட ஆர்டர் செய்வாங்க. உற் சாகமா இருக்கும்.

திராவிட்டும் சச்சினும் வேற மாதிரியானவங்க. அதுவும் சச்சின், ரஜினி மாதிரி. ராத்திரி பதி னொரு மணிக்கு



மேலதான் ரெஸ்டாரண்ட் பக்கம் வருவார். லைட்டா சாப்பிடுவார். ஹெல்த் கான்ஷியஸ் ஜாஸ்தி.

ஒருமுறை அப்படி பிராக்டீஸ் செஷனுக் காக சென்னை வந்திருந்தார். நல்ல மழை. பிராக்டீஸ் கேன்சல். ரூம்லேயேவா உட்கார்ந் திருக்க முடியும்? எங்க தாஜ் கொரமண்டல் மேனேஜர் ஒரு ஐடியா பண்ணினார்.

வெலிங்க்டன் ஹாலை, டேபிள் டென்னிஸ் ஹாலா மாத்திக் கொடுத் துட்டார். உள்ளேயே ரெண்டு டிடி டேபிள் போட்டார். சச்சின்கிட்ட விஷயத்தைச் சொன்னேன். உற் சாகமா 'விளையாட வரியா'ன்னு கூப்பிட் டார் சச்சின். 'சரி'ன்னு சொல்லிட்டேன்.



படம்: HINDU



**ம**றுநாள் வெலிங்க் டன் ஹால் போனா, சச்சி னும் திராவிட்டும் டிடி விளையாடிக் கிட்டு இருந்தாங்க. சச்சின் என்னைக் கூப்பிட்டார். சரின்னு கோதாவுல இறங்குனேன். இவரு கிரிக்கெட்டர், டிடி என்ன ஆடப் போறாருன்னு ஒரு தைரியம் தான். மேட்ச் வேற.

மனுஷன் சொல்லிச் சொல்லி அடிச்சார். மூணு மேட்ச்லேயும் 0 - 21. நான் 0 பாயிண்ட். அவரு 21 பாயிண்ட். அப்புறம்தான் சச்சின் கிரிக்கெட் டுல மட்டு மில்லை, டேபிள் டென்னிஸ்ல யும் ஃபுட் பால்லேயும் கில்லின்னு புரிஞ்சு கிட்டேன்.



**இ**வங்க எல்லாம் விளையாட்டுக்காரங்க, ஜாலியா சமைச்சுப் போட்டு, ஜாலியா நேரம் போகும். கொஞ்சம் சீரியஸான ஆளுங் களுக்கும் சமைச்சு இருக்கேன். அதுவும் ராயல் சமையல். ஒரு ராணிக்கு. எலிசபெத் மகாராணிக்கு. அது...

(அடுத்த வாரம்)

கலக்க வருதுப்பா...

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி!

## இப்ப கன்னியாகுமரி, தூத்துக்குடி மாவட்டங்களுக்கும் வருது கல்கி டீம்...

- திரிவேணி சங்கமம்
- வானுயர் வள்ளுவர்
- தாணுமாலயன் வாழ் சுசீந்திரம்
- பத்மனாபபுரம் கோட்டை
- ரகசியம் சொல்லும் பேச்சிப்பாறை
- திர்ப்பரப்பு அருவி
- சினிமாவில் நடிக்கும் முட்டம்
- குளிர்ச்சியான குளச்சல்
- வ.உ.சி.யின் ஒட்டப்பிடாரம்
- தசரா புகழ் குலசேகரபட்டினம்
- வீரம் விளைந்த பாஞ்சாலங்குறிச்சி
- கவிச்சூரியனின் கருவறை



இன்னும் என்னவெல்லாம் இருக்கு?
உங்க மாவட்டங்களின் (+) (–) என்ன? எழுதி அனுப்புங்க...

வாசகர்களே!



கன்னியாகுமரி
தூத்துக்குடி

மாவட்டங்களின் வாசகர்களே...
திக்திப்பான அனுபவத்துக்கு
ரெடியாகுங்க!

உங்க
மாவட்டத்தைப் பத்தி
நீங்க அனுப்புற
தகவல்கள்தான் கல்கி
கன்னியாகுமரி, தூத்துக்குடி
மாவட்ட ஸ்பெஷல்
இதழ்களுக்கு
அஸ்திவாரம்!

விவரங்கள்
அடுத்த
பக்கத்துல
இருக்கு!



